பதிவு எண் எம்.8798




# தீக்கதிர்

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) நாளிதழ்

கதிர் 9-ஏ) மதுரை 24—10—71 ஞாயிறு (வெளியூர் 25—10—71 திங்கள் (மலர் 57


## மாநிலக்குழு கூட்டம்

இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) தமிழ் மாநிலக் குழு கூட்டம் மதுரையில் அக்டோபர் 26, 27, 28 தேதிகளில் நடைபெறும்.

அக். 26-ம் தேதி காலை 9 மணிக்கு கூட்டம் தொடங்கும். உரிய நேரத்திற்குள் வந்து சேரும்படி மாநிலக் குழு உறுப்பினர்களைக் கேட்டுக் கொள்கிறேன்.

வாழ்த்துக்கள்,
எம். ஆர். வெங்கட்ராமன்,
செயலாளர்.

# போனஸ் வரம்பை உயர்த்த உடனடியாக அவசரச்சட்டம் இயற்றுக!

## இந்திய தொழிலாளர் மாநாட்டில் தொழிலாளர் பிரதிநிதிகள் கோரிக்கை!

புதுடெல்லி, அக். 23 —

எந்தவித முன் நிபந்தனையுமின்றி குறைந்தபட்ச போனஸ் வரம்பை 4 சதவிகிதத்திலிருந்து 8·33 சதவிகிதமாக உயர்த்துவதற்கு மத்திய அரசாங்கம் உடனடியாக ஒரு அவசரச் சட்டம் பிறப்பிக்கவேண்டும் என்று சி. ஐ. டி. யூ., ஏ. ஐ. டி. யூ. சி. முதலிய மத்திய தொழிற்சங்க அமைப்புகள் வற்புறுத்தியுள்ளன.

20 சதவிகித போனசுக்கு உச்சவரம்பை அகற்றவேண்டும் என்றும் அவை கோரியுள்ளன.

கடந்த வியாழனன்று கூடிய மத்திய தொழிற்சங்க அமைப்புகள் இரண்டு நாள் கூட்டத்தில் இயற்றப்பட்ட தீர்மானம் இந்த இரு கோரிக்கைகளையும் வற்புறுத்தியுள்ளது.

கூட்டத்தில் இயற்றப்பட்ட இன்னொரு தீர்மானம் மூடப்பட்டிருக்கும் எல்லா தொழில் நிறுவனங்களையும் ஒரு அவசரச் சட்டம் பிறப்பித்து அரசு எடுத்துக்கொள்ள வேண்டும் என்று கோருகிறது. ஒரு தொழில் நிறுவனத்தை மூடுவதற்கு முதலாளி விரும்பினால் அவர் 90 நாள் நோட்டீஸ் கொடுக்கவேண்டும் என்றும் இந்த 90-நாட்களுக்குள் அரசாங்கம் அந்தத் தொழில் நிறுவனத்தை மேற்கொள்ள வேண்டும் என்றும் தீர்மானம் கூறுகிறது.

எல்லா வகைத் தொழிலாளர்களுக்கும் ஊழியர்களுக்கும் ஒரு வருட சர்வீசுக்கு ஒரு மாதச் சம்பளம் வீதம் கிராஜுடி கிடைக்கும் முறையில் ஒரேமாதிரி கிராஜுடி திட்டத்துக்கு வகைசெய்யும் அவசரச் சட்டத்தை அரசாங்கம் இயற்ற வேண்டும் என்று இன்னொரு தீர்மானம் வற்புறுத்துகிறது.

### இந்தியத்தொழிலாளர் மாநாடு

இந்தியத் தொழிலாளர் மாநாட்டின் முதல் நாள் கூட்டத்திலும், போனஸ் குறைந்தபட்ச வரம்பை உயர்த்துவதற்கும் 20சதவிகித உச்சவரம்பை அகற்றவும், போனஸ் சட்டத்தைத் திருத்துவதற்கு அவசரச் சட்டம் பிறப்பிக்க வேண்டும் என்று தொழிலாளர் பிரதிநிதிகள் வற்புறுத்தினர். முதலாளிகளின் பிரதிநிதிகள் இதை எதிர்த்தனர். போனஸ் பிரச்னையை ஆராய கமிட்டி அமைக்கும் அரசாங்கத்தின் திட்டத்தை முதலாளிகள் வரவேற்றனர்.

மாநாட்டைத்துவக்கி வைத்துப் பேசிய மத்திய தொழிலாளர் அமைச்சர் காடில்கர் லாபத்தைப் பொறுத்து குறைந்த பட்ச போனஸ் வரம்பை 4 சதவிகிதத்திலிருந்து 8·33 சதவிகிதமாகப் படிப்படியாக உயர்த்தும் திட்டத்தை குறிப்பிட்டார். போனஸ் பிரச்னையை ஆராயும் முத்தரப்புக் கமிட்டியின் அறிக்கை வரும்வரை இத்திட்டத்தை ஏற்குமாறும் அவர் கூறினர்.

8·33 சதவிகிதத்துக்கு குறைந்த போனஸை ஏற்க முடியாது என்று சி. ஐ. டி. யூ. யூ. டி. யூ. சி., ஐ.என்.டி.யூ.சி. பிரதிநிதிகள் கூறினர்.

தொழிற்சங்க அங்கீகாரப் பிரச்னை தீர்க்கப்படாதவரை தொழில் அமைதியைக் காக்க முடியாது என்று சி. ஐ. டி. யூ. பிரதிநியான தோழர் பி. ராமமூர்த்தி எச்சரித்தார். இதை இரகசிய வாக்கெடுப்பு முறை மூலம் தீர்மானிக்கவேண்டும் என்றும் அவர் கூறினர்,

## நியூ ஆம்பாடி கதவடைப்பை நீக்ககோரி மறியல் போராட்டம்

### மேலும் 10 பேர் கைது

விளவங்கோடு, அக். 22—

நியூ ஆம்பாடி எஸ்டேட் கதவடைப்பை நீக்கக்கோரி விளவங்கோடு தாலுகா அலுவலகம் முன்னால் அக். 21-ல் மறியல் செய்யப்பட்டது, அப்போது 10 தோழர்கள் கைது செய்யப்பட்டார்கள்.

வைகுண்டம் தோட்டம் இன்று அடையாள வேலை நிறுத்தம் செய்து 100 பெண்கள் உள்பட 300பேர் 13 மைல் நடந்து வந்து விளவங்கோடு தாலுகா அலுவலகம் முன்னால் மறியலில் பங்கெடுத்தனர். பகல் சுமார் 12 மணிக்கு மறியல் நடந்தது. நீண்டநேரம் கைது செய்யப்படாமல் 4-15 மணிக்கு கைது செய்யப்பட்டனர்.

அக். 19-ல் கிரின்சாம் தோட்டம் தொழிலாளர்கள் மறியலில் பங்கு கொண்டு பத்து பேர் கைது செய்யப்பட்டனர். கைது செய்யப்பட்டவர்களுக்கு அன்று இரவும் மறுநாள் பகலும் குழித்துறை காவல் நிலையத்தில் உணவு கொடுக்காமலே பாளையங்கோட்டை மத்திய சிறைக்கு கொண்டு போகப்பட்டனர்

போராடும் தொழிலாளர்களை கொடுமைப் படுத்தப்படுகிறார்கள்.

குமரி மாவட்டத்தில்

## போராடும் தொழிலாளர்களுக்கு ஆதரவு-ஊர்வலம்பொதுக்கூட்டம்

தக்கலை, அக். 22—

குமரிமாவட்டத்தில், நியூஆம்பாடி தோட்டத் தொழிலாளர்களுக்கும், கைநெசவு தொழிலாளர்களுக்கும் தங்களது நியாயமான கோரிக்கைகளுக்காகப் போராடி வருவதும், மறியலில் ஈடுபட்டு சுமார் 200 பேர் கைதாகி பாளையங்கோட்டை சிறையில் அடைக்கப்பட்டதும் தெரிந்ததே!

இத்தொழிலாளர்களுக்கு ஆதரவாக குமரி மாவட்டத் தோட்டத் தொழிலாளர்களின் சார்பாகவும், மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி கிளைகளின் சார்பிலும் ஊர்வலமும் பொதுக்கூட்டங்களும் நடத்தப்பட்டு வருகின்றன.

### தோட்ட தொழிலாளர் சார்பில்

கடந்த 17—10—71-ந்தேதி மாலையில் போத்தியூனில் பொதுக்கூட்டம் நடைபெற்றது. அதில் தோழர்கள் எம். எம். அலி, பி. பெருமாள் ஆகியோர் பேசினர் மதுரைகுமாரி குழுவினரின் இன்னிசை நிகழ்ச்சியும் நடைபெற்றது.

18—10—71-ந் தேதி மாலையில் குலசேகரத்தில் நடைபெற்ற பொதுக்கூட்டத்திற்கு தோழர் பசுருதீன் தலைமை வகித்தார். தோழர்கள் எம்.எம் அலி, ஜெ.ஹேமச்சந்திரன், பி பெருமாள் ஆகியோர் பேசின மதுரைகுமாரி குழுவின் இன்னிசை நிகழ்ச்சி நடைபெற்றது, பொதுக்கூட்டத்திற்கு முன்பு ஊர்வலம் நடைபெற்றது.

## பிரதமர் இந்திரா வெளிநாட்டுப் பயணம்

புதுடில்லி, அக். 24—

பிரதம மந்திரி இந்திரா காந்தி இன்று 6-வார வெளிநாட்டுச்சுற்றுப்பிரயாணத்தை மேற்கொண்டு பிரசெல்ஸ் புறப்படுகிறார்.

அவர் பெல்ஜியம், மேற்கு ஜெர்மனி, முதலிய 6 நாடுகளில் சுற்றுப் பிரயாணம் செய்து பங்களாதேஷ் பிரச்னை பற்றி பேசுவார் என்று அறிவிக்கப்படுகிறது.

வெளி நாட்டுச் சுற்றுப் பிரயாணம் மேற்கொள்ளுவதையொட்டி அக் 23ம் தேதி இரவில் வானொலியில் பேசிய பிரதமர் இந்திரா காந்தி நாட்டு மக்கள் ஒற்றுமையாக இருக்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டார். எந்தக் கொள்கைகளைப் பின்பற்றினாலும் அரசியல் கட்சிகள் இந்தச் சந்தர்ப்பத்தில் ஒன்று பட்டு நிற்கவேண்டுமென்றும், அபாய நிலைமை இருந்த போதிலும் வெளி நாடுகளின் அழைப்பை நீண்ட காலமாக நிறைவேற்றாமல் இருப்பதால்தான் தான் செல்லுவதாகவும் வெளிநாடு சென்றாலும் தம் மனது இங்கேயே இருக்கும் என்றும் அவர் கூறினர்.

உற்பத்தியைப் பெருக்க வேண்டும் என்றும் அவர் கேட்டுக் கொண்டார்.

கருங்காலிகளை வைத்து

## முதலாளியின் அடக்குமுறை!

சென்னை, அக். 23—

சென்னைக்கு அருகிலுள்ள மாதவரம் மில்க் ரோட்டில் இருக்கிறது ரிட்டார்ட்லேபரட்டரீஸ் என்ற ஆங்கில மருந்து வகைகள் தயார் செய்யும் தொழிற்சாலையில் தொழிலாளர் 70-71-ம் ஆண்டு போனசும், மற்றும் பல கோரிக்கைகளை வைத்தும் போராடுகின்றனர்.

முதலாளி, போலீஸ் துணையுடன், கருங்காலிகளையும், அடியாட்களை வைத்தும் போராட்டத்தை உடைக்க முயற்சிக்கிறார்

தொழிலாளர் குடியிருப்பு காலனியை பலவந்தமாக பூட்டி விட்டார் இதைக்கண்டு பொதுமக்களும், தொழிலாளர்களும், கொதிப்படைந்துள்ளார்கள்,

இந்நிலையில் தொழிலாளர்கள் உண்ணாவிரதப் போராட்டம் நடத்தத் திட்மிட்டுள்ளனர்.

## 5 மைல் ஊர்வலம் வந்து மனு!

மதுரை, அக். 23—

இன்று பகமலை மகாலெட்சுமி ஆலைத் தொழிலாளர்கள் மில் வாசலில்இருந்து ஊர்வலமாக ஐந்து மைல் வந்து மாவட்ட ஆட்சித்தலைவரிடம் மனுக் கொடுக்கப்பட்டது.

இந்த ஊர்வலத்துக்கு ஐக்கியக்கமிட்டி தொழிற்சங்கப் பிரதிநிதிகளான சுந்தரம், பிச்சை, இருதயராஜ், ப. மு. குமார் (ம. ப. தொ. ச,) எம். ராமமூர்த்தி,(ஐ.ப.தொ.ச) எம். வேலு (ஐ என். டி.யூ சி) ஆகியோர் தலைமை தாங்கிச் சென்றனர். தொடர்ந்து நான்கு நாளாக இன்று உள்ளிருப்பு வேலை நிறுத்தம் நடைபெறுகிறது, (ந.நி)

## தொழிலாளர் மீது நக்சலைட் பட்டம் சுமத்துவதேன்?

### சட்ட மன்றத்தில் ஒத்திவைப்பு பிரேரணை தாக்கல்

சென்னை, அக். 23—

உரிமைக்காகப் போராடும் தொழிலாளர்கள் மீது நக்சல்பாரி என்று பட்டம் சூட்டப்படும் நிலைமையைப் பற்றி விவாதிக்க சபை நிகழ்ச்சிகளை ஒத்திவைக்கக் கோரும் பிரேரணை தமிழக சட்டமன்றத்தில் ஏற்கப்படவில்லை.

இந்த ஒத்திவைப்புப் பிரேரணையை வலது கம்யூனிஸ்ட், சுதந்திரா உறுப்பினர்கள் கொண்டு வந்தனர்.

தொழிலாளர்கள் மீது நக்சல்பாரி பட்டம் சூட்டவில்லை என்று முதலமைச்சர் மறுத்துப் பேசினர்.

பாளையங்கோட்டை

## மாணவர் மீது தாக்குதல்

### ஒத்திவைப்பு பிரேரணை

சென்னை, அக் 23—

பாளையங்கோட்டையிலுள்ள புனித சவேரியார் கல்லூரியில் போலீஸ் புகுந்து மாணவர்களைத் தாக்கியது சம்பந்தமாக சட்டமன்றத்தில் இன்று ஒத்திவைப்பு பிரேரணை கொண்டு வரப்பட்டது.

அரசாங்கத் தரப்பில் இப்பிரேரணை எதிர்க்கப்பட்டதால் அது சபையில்நிறைவேறவில்லை.

அக்கல்லூரியில் மாணவர் பேரவை அமைப்பதற்கு கல்லூரி முதல்வரை இணங்கச் செய்வதற்கான சூழ்நிலையை உருவாக்க கலெக்டர் முயன்று வருவதாகவும் கல்வி அமைச்சர் அறிவித்தார்.

## கோவைப் பஞ்சாலைத் தொழிலாளர்களுக்கு

### சி. ஐ. டி. யூ. சங்கத்தின் வாழ்த்து

கோயமுத்தூர், அக் 23—

கோவை மாவட்ட மில் தொழிலாளர் சங்கத்தின் சார்பில் கீழ்க்கண்ட அறிக்கை வெளியிடப்படுகிறது:—

கோவை மாவட்டத்தில் 50 பஞ்சாலைகளில் அக். 5-ம் தேதி முதல்அக் 21-ம் தேதி முடிய 17நாட்கள் தொழிலாளர்கள், குறைந்தபட்ச போனஸ் 8-33 சதவிகதமும்,உச்சவரம்பை நீக்கவும் 1969-ம் ஆண்டு போனசைப் பிடித்தம் செய்யக்கூடாது என்றும் கோரிக்கைகளை முன்வைத்து 1969 70 ஆண்டுகளுக்கு மூன்று சங்கங்கள் செய்துள்ள ஒப்பந்தத்தை ஏற்க மறுத்து, ஒன்றுபட்ட போராட்டத்தை 4 சங்கங்களின் கூட்டுத் தலைமையில் உறுதியாக நடத்தி வெற்றி கண்டுள்ளதற்காக சகல பஞ்சாலைத் தொழிலாளர்களையும் கோவை மாவட்ட மில் தொழிலாளர் சங்கம் (சி. ஐ. டி. யூ) வாழ்த்துகிறது ஒப்பந்தத்துக்கு உட்பட்ட மூன்று சங்கத்தைச் சேர்ந்த சகோதரத் தொழிலாளர்களும் இப்போராட்டத்தை வெற்றிபெற ஒத்துழைப்புத் தந்து ஆதரித்ததற்கு விசேஷமாக நமது சகோதர வாழ்த்துக்களையும், பாராட்டுதலையும் தெரிவித்துக் கொள்கிறோம்.

### அடக்குமுறையை எதிர்த்து நின்றதற்குப் பாராட்டு !

போராட்ட காலத்தில் ஒப்பந்தம் செய்திருந்த சங்கத் தலைவர்கள் கிலரது மிரட்டல், அவதூறுப் பிரச்சாரம், வேலை நிறுத்தம் செய்துள்ள தொழிலாளர்களுக்கு எதிராக மற்ற சகோதரத் தொழிலாளர்களைத் தூண்டிவிட்டு, மில்லுக்குள் சண்டையை உண்டாக்கி ஒற்றுமையை உடைக்கவும் போராட்டத்தை உடைக்கவும் செய்த சதிகள் அனைத்தையும் பொறுமையோடு சகித்து சகோதரத் தொழிலாளர்களை அணைத்துக்கொண்டும். முதலாளிகள் கிலர், சில மில்களில், போராடுகிற முக்கிய தொழிற்சங்க ஊழியர்களை சஸ்பெண்ட் செய்ததையும் உடுமலை பிரிமியர் மில் முதலாளி, தொழிலாளர்களுக்கு எதிராக போலீசுக்கு பொய் குற்றச்சாட்டைக் கொடுத்து 22 தொழிலாளர்களைக் கைது செய்ததையும், மற்றவிதமான ஆத்திரமூட்டல்களையும் உறுதியாக எதிர்த்துச் சமாளித்து போராட்டத்தை வெற்றிகரமாக நடத்தியுள்ளதானது நமது தொழிலாளர்களின் ஒப்பற்ற சாதனையும், சகோதர ஒற்றுமையின் வெற்றியுமாகுமென்று ஊர்ஜிதம் செய்து சகல தொழிலாளர்களையும், தீவிர ஊழியர்களையும் மறுபடியும் பாராட்டுகிறோம் அத்துடன் கோத்தாரி ஏ. பி மில்லின்தொழிலாளர்கள்இங்கும், சென்னையிலும் உண்ணாவிரதமும், மறியல் போராட்டமும் நடத்தி சிறை சென்றுள்ளதற்கும் நாம் வாழ்த்துக்களும், பாராட்டுதலும் விசேஷமாகத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

### தொடர்ந்து கிளர்ச்சி செய்வோம்

நமது வேலை நிறுத்தப் போராட்டம் தற்காலிகமாக நின்றுள்ளதே தவிர இவைத்துள்ள வெற்றிகளை நடைமுறையில் கொண்டு வந்து தொழிலாளர்களுக்கு நன்மை செய்விக்க, நமது நடவடிக்கைகளைத் தொடர்ந்து நடத்த வேண்டும் 1969-ம் ஆண்டுக்கான ஒப்பந்தத்தை முறியடிக்க உடனடியாகச் சட்ட பூர்வ நடவடிக்கைகளை எடுத்து முன்பணப் பிடித்தத்தைத் தடுத்து நிறுத்த வழிகாணுவதவசியம். மேலும் குறைந்தபட்ச போனஸ் 8 1/3 சதவீதம்என்பதுஉறுதிப்படவும், உச்சவரம்பில்லாது உயர்ந்த போனஸ் பெறவும் இந்திய அரசை வற்புறுத்தி, நெருக்க நமது கிளர்ச்சிகளும் நடவடிக்கைகளும் தொடர்ந்து நடைபெற வேண்டும்.

### ஒற்றுமையை வளர்ப்போம்!

மேலும் பஞ்சாலைத் தொழிலாளர்களுக்குத் தீர்க்கப்பட வேண்டிய அடிப்படையான பிரச்னைகள் பல உள்ளன. சம்பள உயர்வு, தினக்கூலி முறையொழிப்பு, நல்ல கிராஜுட்டி திட்டம், வாரிசுக்கு வேலை உரிமை, வேலைப்பளு உயர்வு தடுப்பது, வேலைஉத்திரவாதம், மூடிய மில்களைத் திறப்பது போன்ற முக்கியபிரச்னைகளின் தீர்வுக்காக தொழிலாளர்கள் தனித்தனி மில்களில் போராடி வருகிறார்கள்.

இவைகளுக்கு எல்லாம் நல்ல தோர் முடிவு காண சகல தொழிலாளர்களின் ஒற்றுமை பலத்தைத் திரட்டி போராடுவதற்காக இன்று ஏற்பட்டுள்ள சகோதர ஒற்றுமையை காத்து வளர்த்து முன் செல்லவும் இக்கடமைகளை நிறைவேற்றவும் கோவை மாவட்ட மில் தொழிலாளர் சங்கம் சகோதர சங்கங்களோடு ஒன்றுபட்டு அயராது பாடுபடும் என்று உறுதி கூறுகிறோம்.

## தீக்கதிர், செம்மலர் ஏஜண்டுகள், கட்சித் தோழர்களுக்கு ஒரு முக்கிய அறிவிப்பு

தோழர்களே !

தற்சமயம் ஏஜெண்டு தோழர்களும், கட்சித் தோழர்களும் கடிதங்கள் எழுதும் போது தீக்கதிர், செம்மலர் பில், பண வரவு-செலவு, பிரதிகள் போன்ற நிர்வாக விசயங்கள் பற்றியும், ஆசிரியர் குழுவுக்கு எழுதக் கூடிய செய்திகள், கருத்துக்கள் பற்றியும், மாநிலக்குழுவுக்கு எழுதக் கூடிய விசயங்கள் பற்றியும் அலுவலகத்திலுள்ள யார் பெயருக்காவது ஒன்றாக ஒரே கடிதத்தில் எழுதி விடுகிறார்கள். தினசரி பத்திரிக்கையை நடத்தும் கடினமான வேலையை செய்து கொண்டிருக்கும் தோழர்களுக்கு இதனால் நிர்வாக சிரமங்கள் ஏற்படுகின்றன. மேலும் தோழர்கள் கடிதத்தில் எழுதியுள்ள பிரச்சனைக்கு உரிய காலத்தில் தீர்வு காண இயலாது போகிறது.

இதே போன்று, பணம் அனுப்பும் போது-மாநிலக்குழுவுக்கு அனுப்பக்கூடிய நிதி, மாநிலக்குழுவின் பொறுப்பிலுள்ள புத்தகங்களுக்கான ஆர்டர் பணம், செம்மலர், தீக்கதிர் ஆகியவைகளுக்கான பணம், சி.ஐ.டி யூ; விவசாய சங்கத்திற்கான பணம ஆகியவற்றை ஒன்றாக அனுப்பிவிடுகிறார்கள் இதனால் வெவ்வேறு தோழர்களின் பொறுப்புக்களில் இருக்கும் கணக்குகளில் ஒரே மணியார்டரில் வந்த பணத்தைப் பதிவு செய்வதில் தாமதமும், சிரமமும் ஏற்படுகிறது மேலும், பணம் எதற்காக அனுப்பப்படுகிறது என்பதையும், யார் அனுப்பியது என்ற விலாசத்தையும் எங்களுக்குக் கிழித்துத் தரப்படும் மணியார்டர் கூப்பனில்எழுதாமல் இருப்பதையும் இங்கு குறிப்பிட விரும்புகிறோம்,

எனவே இனி தோழர்கள் எழுதும் கடிதங்களையும், பணத்தையும் கீழே குறிப்பிட்டுள்ள தனித்தனி முகவரிக்கே அனுப்பி உதவும்படி கேட்டுக் கொள்கிறோம்.

1. பத்திரிக்கைக்கான செய்திகள், கருத்துக்களை அனுப்ப வேண்டிய முகவரி :—

தோழர். **கே. முத்தையா,**
ஆசிரியர்;
"தீக்கதிர்"
13, முதல் சந்து, வடக்குச் சித்திரை வீதி,
மதுரை-1.

2. பத்திரிக்கைக்கான பில் தொகைகள், நன்கொடை, விளம்பரக் கட்டணங்கள், பத்திரிக்கை எண்ணிக்கை, கணக்கு போன்ற இதர விபரங்களை கீழ்க்காணும் முகவரிக்கு அனுப்ப வேண்டும்.

தோழர் **கே. ராமசாமி,**
நிர்வாகி, "தீக்கதிர்"
13, முதல் சந்து, வடக்குச்சித்திரை வீதி;
மதுரை-1.

(செம்மலருக்கும் தோழர் கே ராமசாமி அவர்களே நிர்வாகி).

3. மாநிலக் குழுவிற்கு எழுதும் கடிதம், விசயங்கள், புத்தகங்களுக்கான ஆர்டர், பணம் ஆகியவைகளை கீழ்க்காணும் முகவரிக்கு எழுதக் கேட்டுக் கொள்கிறோம்.

தோழர். **எம். ஆர். வெங்கட்ராமன்,**
செயலாளர்;
தமிழ் மாநிலக்குழு;
இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்)
13, முதல் சந்து, வடக்குச்சித்திரை வீதி,
மதுரை-1.

வாழ்த்துக்கள்,
**மா. க. செயற்குழு.**

**தீக்கதிர்**

# மக்கள் மீது வரிச்சுமை ஏறுகிறது!

வாழ்க்கை நடத்த முடியாமல் திண்டாடிக் கொண்டிருக்கும் மக்கள்மீது ஒருவருடத்துக்கு மேலும் ரூ 70 கோடி வரிச்சுமையை ஏற்றும் திட்டத்தின் பகுதியாக ரயில் கட்டணத்தையும் தபால் கட்டணத்தையும் இந்திய அரசாங்கம் உயர்த்தியுள்ளது.

இதற்காக ஜனாதிபதிபிறப்பித்திருக்கும் அவசரச் சட்டத்தில்ரயில்கட்டணத்தை ரூபாய்க்கு5காசுவிதம் உயர்த்தப்பட்டுள்ளது. இன்லண்ட் லெட்டர் 20 காசாகவும், கவர் 25 காசாகவும் உயர்த்தப்படுகிறது. மணியார்டர் கட்டணமும் தந்திக் கட்டணமும் உயர்த்தப்படுகிறது. மேலும் பிராமிசரி நோட்டு, எக்சேஞ்ச் பில், ஏற்றுமதி ஒப்பந்த பில் இன்சூரன்ஸ் பாலிசி, பங்கு மாற்றும் கடன் பத்திரம், ரசீது முதலிய தஸ்தாவேஜுகளுக்கு அதிகப்படியாக 10 காசு தீர்வை வசூலிக்கப்படும். பத்திரிக்கைகள், சஞ்சிகைகள் ஆகியவற்றிற்கு 2காசு எக்சைஸ் தீர்வை விதிக்கவும் ஜனாதிபதி பிறப்பித்துள்ள அவசரச் சட்டத்தில் வகை செய்யப்பட்டுள்ளது.

இம்மாதிரி மக்கள் மீது சுமை ஏற்றும் நடவடிக்கைகளை எடுக்குமாறு மாநில அரசுகளையும் மத்திய அரசு கேட்டுள்ளது.

பங்களாதேஷ் அகதிகள் வந்திருப்பதால் ஏற்படும் செலவைச் சரிக்கட்டுவதற்காக அரசாங்கம் இந்தச் சுமையை மக்கள் மீது ஏற்றுவதாக அரசு கூறுகிறது.

பங்களாதேஷ் அகதிகளைப் பராமரிப்பதின் பேரில் நாடெங்கும் ஏற்கனவே வாழ்க்கை நடத்த முடியாமல் கண்விழி பிதுங்கிக் கொண்டிருக்கும் இலட்சோபலட்சம் மக்களை அகதிகளின் நிலைக்குத் தள்ளுவதற்கு இந்திய அரசாங்கம் முற்பட்டிருப்பதையே இந்தப் புதிய வரி விதிப்பு காட்டுகிறது.

சமீபத்தில் நடத்தப்பட்ட தேசிய ஆய்வின்படி நம் நாட்டில் வறுமை நிலைக்கும் கீழாக வாழும் மக்கள் எண்ணிக்கை 1960-61-ல் 52 சதவிகிதத்திலிருந்து இப்போது 70 சதவிகிதமாக உயர்ந்திருப்பதாக அறியப்படுகிறது.

இந்நிலைமையிலுள்ள மக்கள் வாழ்க்கையை மேலும் நரக வாழ்க்கையாக்கும் கொள்கையை அரசு கடைப்பிடிப்பதையே மத்திய அரசின் பட்ஜெட்டும் காட்டியது.

மத்திய, மாநில அரசுகளின் பற்றுக்குறை பட்ஜெட்டுகளை சரிகட்ட 1971-72ம் ஆண்டின் முதல் 6 மாதங்களிலேயே ரூ. 350 கோடிக்கு நோட்டடிக்கப்பட்டுள்ளது.

இத்தகைய பணவீக்க நிலைமையினால் சமீப மாதங்களில் விலைவாசிகள் கண்மூடித்தனமாக ஏறியிருப்பதை ரிசர்வ் பாங்கு அறிக்கையும் சுட்டிக்காட்டியுள்ளது.

இந்த நிலைமையைக் கணக்கிலெடுத்துக்கொள்ளாமல் பங்களாதேஷ் அகதிகள் பராமரிப்புக்கு நிதி திரட்டுவதற்கு ஏழை மக்கள்மீதே வரி விதிக்க முற்பட்டிருப்பதை இந்திய அரசின் நடவடிக்கை காட்டுகிறது.

ஏழை மக்களை இவ்விதம் தாக்கும் அரசு இத்தனை ஆண்டுகளாக நாட்டையே ஒட்டாண்டியாக்கும் அளவுக்கு கொள்ளையடித்து கோடி கோடியாகக் குவித்து வைத்திருக்கும் உடைமை வர்க்கங்கள் மீது கைவைக்கத் தயாராக இல்லை.

இந்த வரி விதிப்பை விதிக்கும்முன் இதன் விளைவுகளை ஆராய மக்கள் பிரதிநிதிகளுடன் ஆலோசனை நடத்தக்கூட அரசு தயாராக இல்லை. ஜனாதிபதியின் அவசரச் சட்டத்தின் மூலமே வரிச்சுமையை ஏற்றும் நடவடிக்கையின்மூலம் மக்களின் தாங்கும் சக்தியைப் பற்றியோ அவர்களுடைய நலன்களைப்பற்றியோ கொஞ்சமும் கவலைப்படவும் சீர்தூக்கிப் பார்க்கவும் அரசு தயாராக இல்லை என்பதைக் காட்டிக்கொண்டுள்ளது. அரசின் இந்தப்போக்கை எதிர்த்து மக்கள் கிளர்ந்தெழுவார்கள் என்று எச்சரிக்கின்றோம்.

## மார்க்சிஸ்ட் கட்சி சார்பில் ஊர்வலம்

தக்கலை, ஆக். 23—

இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) கிளையின் சார்பில் 12-10-71-ந்தேதி ஊர்வலமும் பொதுக் கூட்டமும் நடைபெற்றது ஊர்வலம் தக்கலையில் இருந்து புறப்பட்டு பதமநாமபுரம், முட்டக்காடு, குமாரபுரம், செம்பருத்திவிளை வழியாக மணக்காவிளை சந்தைத்திடலை அடைந்தது. அங்கு நடந்த பொதுக் கூட்டத்தில் தோழர்கள் எ. பரமேஸ்வரன் நாடார், பி. பெருமாள், பி. திவாகரன் ஆகியோர் பேசினர்.

### களியக்காவிளையில்

அன்று களியக்காவிளையிலும் ஊர்வலமும் பொதுக் கூட்டமும் நடைபெற்றது. பொதுக் கூட்டத்தில் தோழர்கள் ஜே. ஹேமச்சந்திரன், டி. மணி, வி. நேசமணி, சுந்தரம், பொன்னப்பன் ஆகியோர் பேசினர்.

இக்கூட்டங்களில் நியூ ஆம்பாடி, கைநெசவுத் தொழிலாளர்களின் போராட்டங்களுக்கு ஆதரவு தெரிவித்தும், பாளையங்கோட்டையில் அடைக்கப்பட்டுள்ள தொழிலாளர்களுக்கு குடிப்பதற்குத் தண்ணீர் வசதிகூட செய்துகொடுக்காது கொடுமை செய்யும் தமிழக அரசின் செயலைக் கண்டித்தும் பேசப்பட்டது.

கடந்த 140 நாட்களாக போராடிக்கொண்டிருக்கும் நியூ ஆம்பாடி தோட்டத் தொழிலாளர்களுக்கு மணவாளக்குறிச்சியில் உள்ள இந்தியன் ரயற் எர்த் எம்பிளாயீஸ் யூனியன் சார்பில் 50 ரூபாய் நிதி கொடுக்கப்பட்டது.

# ஆசிரியர்களுக்கு அரசாங்கமே நேரடியாக சம்பளம் தரவேண்டும்!

## கேரள தனியார் கல்லூரி ஆசிரியர்களின் 40 நாள் போராட்டம்

திருவனந்தபுரம், அக். 23—

தனியார் கல்லூரிகளில் வேலை நியமனம் செய்வதற்கு ஒரு பொறுக்குக் குழுவை ஏற்படுத்த வேண்டும் என்றும்— ஆசிரியர்களுக்கு அரசாங்கமே நேரடியாகச் சம்பளம் பட்டுவாடாச் செய்யவேண்டுமென்றும்— இக்கோரிக்கைகளை அரசு ஏற்றுக்கொண்டால் தான். தனியார் கல்லூரி ஆசிரியர்கள் செப்டம்பர் மாதம் 15-ம் தேதி முதல் நடத்திவரும் வேலை நிறுத்தப் போராட்டத்தை முடிவுக்குக் கொண்டுவர முடியும் என்றும் அகில கேரள தனியார்கல்லூரி ஆசிரியர் சங்கத்தின் தலைவர் பேராசிரியர் கே. எம். சாண்டி இங்கு கூறினார்.

இந்தப் பொறுக்குக் குழுவில் அரசாங்கத்தின் ஒரு பிரதிநிதியும், பல்கலைக் கழகத்தின் ஒரு பிரதிநிதியும் இருக்கவேண்டுமென்றும் அவர் கூறினர்.

"கடந்த 40 நாட்களாக நடைபெற்றுவரும் இப்போராட்டத்தைப் பற்றி, அச்சுதமேனன் அரசாங்கத்திற்கும் கவலையில்லை; தனியார் கல்லூரி முதலாளிகளுக்கும் அக்கறையில்லை!" என்றும் கூறினர்.

## நோபல் பரிசு
## மார்க்சிஸ்ட் கவிஞருக்கு

ஸ்டாக்ஹோம், அக். 23-

சிலி நாட்டு கவிஞரான பாப்லோ நெருடா, இலக்கியத்திற்கான 1971-ம் ஆண்டுக்கான நோபல் பரிசைப் பெறுகிறார்.

இவர் மார்க்சிஸ்ட் கட்சியைச் சேர்ந்தவராவார்.

## வர்த்தக சூதாட்டத்துக்கு போட்டி!

லண்டன் அக் 16—

ஒன்றோடொன்று போட்டி போட்டுக்கொண்டு இயங்கும் 100 தொழில் நிறுவனங்களைச் சேர்ந்த நிர்வாகிகளுக்கிடையே பிரிட்டனில் ஏழு மாதமாக ஒரு போட்டி நடந்தது. என்ன போட்டி தெரியுமா? முதலீடுகளிலும் விலைகளிலும் எவ்வாறெல்லாம் குல்மால் வேலைகள் செய்யலாம்; தமக்குப் போட்டியாக வருபவர்களை எவ்வாறெல்லாம் ஏமாறச் செய்யலாம், அதிக பட்ச லாபத் தொகையை எவ்வாறெல்லாம் பெறலாம் என்பது பற்றித் தமக்குத் தெரிந்த சித்து வித்தைகளையெல்லாம் அந்தத் தொழில் நிறுவனங்களின் நிர்வாகிகள் எடுத்துக் கூறினர். அவர்கள் தெரிவித்த விவரங்களையெல்லாம் கம்ப்யூட்டர் எந்திரங்கள் தொகுத்துப் பரிசீலனை செய்து, அவற்றில் யார் தெரிவித்த யோசனைகள் தலைசிறந்தவை என்பது பற்றிய முடிவைத் தெரிவித்தன. ரோல்ஸ்ராய்ஸ் கம்பெனியைச் சேர்ந்த நிர்வாகிகள் தெரிவித்த யோசனைகள்தாம் தலைசிறந்தவை என்பதுதான் அந்த முடிவு. இதில் வேடிக்கை என்னவென்றால், அந்த ரோல்ஸ்ராய்ஸ் கம்பெனிதான் அண்மையில் திவலாகியுள்ளது.

## கேரள விவசாயத் தொழிலாளரின் வேலை நிறுத்தமும் ஆர்ப்பாட்டமும்

### குடியிருப்பு மனையை சொந்தமாக்க வற்புறுத்தினர்!

ஆலப்புழை, அக். 23 —

1970 ஜனவரி முதல் குடிகிடப்புக்காரர்களுக்கு அவர்கள் குடியிருக்கும் மனைக்கட்டை அவர்களுக்கே சொந்தமாக்கிக் கொண்டதின் பேரில், அச்சுதமேனன் அரசாங்கமானது, விவசாயத் தொழிலாளர்கள் மீது போட்டிருக்கும் வழக்குகளை வாபஸ் செய்ய வேண்டுமென்றும்— விவசாயத் தொழிலாளர் சங்கம் முன் வைத்திருக்கும் கோரிக்கைகளை உடனடியாக அங்கீகரிக்கவேண்டுமென்று கோரியும். 18—10—71-ல் கேரள மாநிலமெங்கும் விவசாயத் தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் செய்தார்கள்.

### லட்சம் பேர் வேலை நிறுத்தம்

ஆலப்புழை மாவட்டத்தில் ஒரு லட்சம் பேர் வேலை நிறுத்தம் செய்து, ஆங்காங்கு கிராமங்களில் ஒன்றுகூடி ஆர்ப்பாட்டம் செய்தார்கள்.

விவசாயத் தொழிலாளர்களின் போராட்ட தளங்களான குட்டநாட்டுப் பகுதியிலுள்ள 12 கிராமங்களிலும் மாபெரும் ஆர்ப்பாட்டங்கள் நடந்துள்ளன.

அம்பலப்புழை தாலுகாவில் 10 ஆயிரத்துக்கும் அதிகமான விவசாயத் தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் செய்து ஆர்ப்பாட்டம் செய்தார்கள்.

இதேபோன்று கேரள மாநிலத்தின் எல்லா மாவட்டங்களிலும் விவசாயத் தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் செய்து ஆர்ப்பாட்டங்கள் நடத்தினர்கள்.

## ஒரே ராக்கெட்டிலிருந்து 8 செயற்கை துணைக்கோள்கள்

மாஸ்கோ அக் 23—

'காஸ்மஸ்'- 444, 445 446, 447, 448, 449, 450, 451 என்ற எட்டு செயற்கைத் துணைக் கோள்களைச் சோவியத்யூனியன் ஒரே ராக்கெட்டிலிருந்து அக்டோபர் 13-ல் விண்வெளியில் செலுத்தியது விண்வெளியை ஆராய்வதற்கான கருவிகள் இவற்றில் உள்ளன. இக்கருவிகள் யாவும் நன்கு இயங்குகின்றன.

## தர்மபுரி சக்தி ரோடுவேஸ் நிர்வாகத்தின் அநீதி!

தர்மபுரி, அக். 23—

தர்மபுரியில் உள்ள சக்தி ரோடுவேஸ் நிர்வாகம், கடந்த 4-9-71-ந் தேதியன்று தொழிலாளர்களை கம்பெனியின் பணிமனைக்கு அழைத்து ஒன்றுமே எழுதப்படாத ரெவின்யூ ஸ்டாம்பு ஒட்டிய 2 பாண்டு பேப்பர்களிலும், வெள்ளைத்தாளிலும் ஒவ்வொருவரும் 3 கையெழுத்திடவேண்டும் என்று வற்புறுத்தியது. கோவிந்தன் என்ற தொழிலாளியை மிரட்டி கையெழுத்து வாங்கியது. இந்த மோசடித்தனத்தை கண்டித்த தொழிலாளர்களை நிர்வாகம் வேலையைவிட்டு வெளியேற்றியதால், தங்களது உரிமைகளுக்காக தொழிலாளர்கள் போராட்டம் நடத்தினர்கள்.

### தொழிலாளர் மீது பொய்க்குற்றச்சாட்டு

செப். 14, 15 தேதிகளில் லேபர் ஆபீசர் முன்னிலையில் நிர்வாகம் சில கோரிக்கைகளை கொடுப்பதாகவும், தொழிலாளர்களைப் பழிவாங்குவதில்லை என்றும் ஒப்பந்தம் செய்தது. ஆனால், நிர்வாகத்தினர் தொழிலாளர்களைத் தொடர்ந்து பழிவாங்கும் எண்ணத்தோடு மோசடியான பொய்க் குற்றச்சாட்டுகளைத் தொடர்ந்து அனுப்பிக்கொண்டும் ரூ 8000-00 நஷ்டஈடு தொழிலாளர்கள் நிர்வாகத்திற்குக் கொடுக்க வேண்டுமென்றும்நோட்டீசு கொடுத்து வருகின்றனர்.

அதோடுமட்டுமின்றி 7—10—71ல் லேபர் ஆபீசர் முன்னிலையில் நிர்வாகம்போனசையும், மற்ற கோரிக்கைகளையும் முறையாக தொழிற்சங்கத்திடம் பேசி, கொடுப்பதாக ஒப்புக் கொண்டது. ஆனால் கோரிக்கைகளை நிறைவேற்றவில்லை நிர்வாகத்தின் இந்த அநியாயப் போக்கை எதிர்த்தும் நிர்வாகத்தின் பழிவாங்கும் போக்கையும் கோரிக்கைகளை கொடுக்கப் படாமலிருப்பதைக் கண்டித்தும் 16—10—71 முதல் தொழிலாளர்கள் போராடி வருகின்றனர். 2 வண்டிகளும் ஓடவில்லை; பஸ்ஸ்டாண்டிலேயே நிறுத்தப்பட்டிருக்கின்றன

### பேச்சு வார்த்தை தோல்வி

17—10—71ல் நடைபெற்ற ஸ்தல அதிகாரிகள் முன்னிலையில் நடைபெற்ற பேச்சுவார்த்தையும், 19—10—71ல் லேபர் ஆபீசர்முன்னிலையில் வேலூரில் நடைபெற்ற பேச்சு வார்த்தையும் நிர்வாகத்தின் பிடிவாதத்தினால் தோல்வியடைந்து தொழிலாளர்கள் உறுதியாகத் தொடர்ந்து போராடி வருகின்றனர்.

## அறுவை சிகிச்சைக்கு ஆள்பிடிக்க ஆசிரியர்களை நிர்ப்பந்திப்பதா?
## தி. மு. க. எம். எல். சி. கண்டனம்

வேலூர், அக். 23 —

குடும்பக் கட்டுப்பாடு அறுவை கிகிச்சை செய்துகொள்ள ஆட்களைப் பிடித்து வரவேண்டும் என்றும், இல்லாவிட்டால் தண்டனை கிடைக்குமென்றும் பள்ளி ஆசிரியப் பெருமக்களை மேலதிகாரிகள் கட்டாயப் படுத்துவதாகப் புகார் கூறப்படுகிறது.

இது பற்றி மேல்சபை தி. மு. க. உறுப்பினர் திரு. அறிவுடை நம்பி கவலை தெரிவித்தார்.

இங்கு 18—10—71ல் நடந்த தென்னாற்காடு மாவட்ட அபிவிருத்தி கவுன்சில் கூட்டத்தில் தான் மேற்கண்ட புகாரைத் தெரிவித்தார்.

குடும்பக் கட்டுப்பாடு ஆபரேஷன் செய்துகொள்ள ஆட்களைக் கொண்டுவரும்படி தங்களைக் கட்டாயப்படுத்துவதாக ஆசிரியர்கள் தம்மிடம் புகார் கூறினர்கள் என்று அறிவுடைநம்பி கூறினார்.

குடும்பக் கட்டுப்பாடு வேலைகளை ஒப்புவிப்பதில் இருந்து விலக்கு அளிக்கும்படியும் அவர் கேட்டுக்கொண்டார்.

### கலெக்டர் போக்கு

அறிவுடைநம்பியின் வேண்டுகோளுக்குப் பதில் அளித்த கலெக்டர் வி. இராமமூர்த்தி, "குடும்பக் கட்டுப்பாடு திட்டங்களை அமுல்படுத்துவதில் ஆசிரியர்களின் பங்கு மகத்தானது. இந்த தேசியப் பணியிலிருந்து ஆசிரியர்கள் ஒதுங்கியிருக்க முடியாது" என்றார்.

## பஸ் கட்டணம் உயர்வு சர்வ கட்சி கண்டனம்!

குளச்சல், அக். 22—

அநியாய அரசு பஸ் கட்டண உயர்வைக் கண்டித்து சர்வ கட்சிகளின் சார்பில் அக் 16—ந்தேதி குளச்சலில் பொதுக் கூட்டம் நடைபெற்றது. அதில் திரு. ஜேம்ஸ் எம். எல். ஏ, முகம்மதுஇஸ்மாயில் என், அச்சுதன் (மார்க்சிஸ்ட்) எஸ். குமரேசன் மற்றும் பலர் பேசினர்.

## புதிய நட்சத்திரம் கண்டுபிடிக்க பட்டது

மாஸ்கோ, அக். 21—

ஜார்ஜிய வானியலாளர்கள் புதிய நட்சத்திரம் ஒன்றைக் கண்டுபிடித்துஉள்ளனர். பூமியிலிருந்து 3 கோடி 50 லட்சம் ஒளி ஆண்டு தூரத்தில் அந்த நட்சத்திரம் உள்ளது. சக்தி வாய்ந்த டெலஸ்கோப்புகளின் மூலம் அவர்கள் இதைஆராய்ந்தனர். இந்த நட்சத்திரத்திலிருந்து வெளிப்படும் சக்தியானது சூரியனுக்குப்பல நூறு கோடி ஆண்டுகள் பிரகாசமளிக்கப் போதுமான அளவில் உள்ளது என்று அவர்கள் கருதுகின்றனர். விண்ணிலே ஒளிவீசும் நட்சத்திரங்களின் தோற்றம், வளர்ச்சி ஆகியவை சம்பந்தமான புதிர்களை விடுவிக்க இத்தகைய கண்டுபிடிப்புகள் உதவுகின்றன.

## அவனியாபுரம் கைநெசவாளர் கூட்டம்

மதுரை அக் 23—

அவனியாபுரம் பிரசன்னா காலனி கமிசன் தறி கைநெசவாளர்கள் கூட்டம் மதுரை நகர் கைநெசவு தொழிலாளர் சங்கத்தின் சார்பாக அக் 21ல் நடைபெற்றது அக்கூட்டத்தில் கீழ்கண்ட தீர்மானங்கள் ஏகமனதாக நிறை வேற்றப்பட்டன.

இப்பொழுது எடுக்கப்படும் கமிஷனை தறி உரிமையாளர்கள் உயர்த்தக்கூடாது. கிடைத்துள்ள போனசிலும் அதிக கமிஷன் எடுக்கக் கூடாது.

இக்கூட்டத்தில் ஒரு ஏரியா கமிட்டி அமைக்கப்பட்டது. அதில் மற்றும் ஆர். ஆர் சாந்தாராம் எஸ் ஆர். மகாதேவன் கே எம், ராதாகிருஷ்ணன் பி. ஆர். சுப்புராம், எம். ஆர். ராஜகோபால், ஏ. வி, சீனிவாசன், ஜுட்டு அ. ராமையர் சுப்பிரமணியன் ஆகியோர் உறுப்பினர்களாகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

இந்தக் கூட்டத்தில் சி. ஐ. டி. யூ. மாநிலக் கமிட்டி உறுப்பினர் தோழர் வி. பாலகிருஷ்ணன் கலந்து கொண்டார்.

## இரயில்வே தொழிலாளியின் குடும்பமே தற்கொலை!

காட்பாடி, அக். 23—

காட்பாடியிலுள்ள இரயில்வே லோகோ ஷெட்டில் கலாசியாக வேலைபார்ப்பவர்,பூசாமி. இவர் தனது மூன்று குழந்தைகளை கிணற்றில் தள்ளி கொன்றுவிட்டு, தானும் இரயிலில் தலை கொடுத்து பரிதாபகரமாக இறந்து போனார்

இவருக்கு நான்கு குழந்தைகள். இவரது பெரிய குடும்பத்தை இவரது கலாசி சம்பளத்தைகொண்டு நிர்வகிக்க முடியவில்லை.

எனவே பயர்மேனாக ஆக ஆசைகொண்டு ஸ்டீம்மேனாக ஆனார். பின் ஸ்டீம்மேன்கள் பயர்மேனாக ஆக முடியாதென்பதால் கலாசியாக முயற்சி செய்தார்.

### அனந்தநம்பியார் கடிதம்

எனவே, இவர் விருப்பத்தின்படி தோழர் அனந்தநம்பியார் சென்னை டி. எஸ். க்கு கடிதம் எழுதியதின்பேரில் சில மாதங்களுக்குப் பின், இவரை கலாசியாக மாற்றி, திரும்பவும் காட்பாடிக்கே மாற்றினர்கள்.

இவர், இங்கு வந்து ஒருவருடம் ஆகிறது. கடன் தொல்லையோ தாங்கமுடியவில்லை. மேலும் சம்பளத்திற்கு முன் இவர் வேலூர் கோர்ட்டுக்கு— காபூல்காரனிடம் வாங்கிய கடனுக்காகச்—செல்லவேண்டியிருந்தது. பணத்திற்கு எங்கே போவது, எனவே மனம் உடைந்து தற்கொலை செய்துகொண்டார்.

வயது அதிகமானதால் இவர் பயர்மேனாக ஆகமுடியவில்லை. நிர்வாகத்தின் இத்தகைய கொடிய, கெடுபிடியான சட்டதிட்டங்களினாலேயே இவர் இறந்தார் என்று பேசிக்கொள்ளப்படுகிறது.

(ந-நி)

## குறிப்புகள்

# இந்திரா காங்கிரஸ் குத்து-வெட்டு!

திருச்சியில் நடைபெற்ற இந்திரா காங்கிரஸ் ஊழியர்கள் கூட்டத்தில் நடைபெற்றிருக்கும் காரசாரமான விவாதம் அக்கட்சிக்குள்ளிருக்கும் கோஷ்டி சண்டையை அம்பலப்படுத்தியுள்ளது.

நகரசபைத் தேர்தலில் ஏற்பட்ட தோல்வியை அடுத்து மாவட்ட, வட்ட, நகர காங்கிரஸ் கமிட்டி தலைவர்கள் பதவியை ராஜினமா செய்யாததேன் என்று மாவட்ட கமிட்டித் துணைத்தலைவர் டாக்டர் ரங்கராஜன் கேள்வி கேட்டுள்ளார்.

மாவட்ட காங்கிரஸ் கமிட்டியே கூட்டாகச் செயல்படவில்லை என்று அதன் செயலாளர் வி நாகு குற்றம் சாட்டுகிறார். மாவட்டத் தலைவர் திரு. எம் பழனியாண்டி தனக்கு எதிராக அவதூறு இயக்கம் நடத்தப்படுவதாக குறை கூறியுள்ளார்.

திருச்சி மாவட்டத்தில் மட்டுமல்ல ஒவ்வொரு மாவட்டத்திலுமுள்ள நிலை இதுவே.

மதுரையில் அக். 18-ல் ஆர். மாரிமுத்து தலைமையில் நடைபெற்ற காங்கிரஸ் ஊழியர் கூட்டத்தில் தமிழ்நாட்டில் இந்திரா காங்கிரசுக்கு புதிய தலைமையை உருவாக்கவேண்டுமென்று கோரியிருக்கிறார்கள். இந்தக் கோரிக்கை நிறைவேற்றப்படாவிட்டால் மறியல் போராட்டம் நடைபெறும் என்றும் எச்சரித்துள்ளார்கள்.

இந்த நிலையில் ஸ்தாபனத்தேர்தலை நடத்த முடியாது என்பதால் ஏப்ரல் மே மாதங்களில்தான் தேர்தல் நடைபெறும் என்று மாநில காங்கிரஸ் கமிட்டி கன்வீனர் திரு. ஏ. பி. சி வீரபாகு அறிவித்துள்ளார்.

1972 துவக்கத்தில் பொதுத் தேர்தல் நடைபெறுகிறக்கும் தமிழ்நாட்டிலேயே இந்த நிலைமையானால் மற்ற மாநிலங்களைப் பற்றி கேட்க வேண்டியதில்லை.

பிரதம மந்திரி இந்திராவின் ஆணைப்படி மாநில காங்கிரஸ் கமிட்டிகளைக் கலைத்துவிட்டு அமைக்கப்படும் அட்ஹாக் கமிட்டிகளில் இடம்பெற காங்கிரஸ் தலைவர்கள் குடுமிப்பிடி சண்டை போடுகிறார்கள். இந்த அட்ஹாக் கமிட்டிகளில் இடம் பெற்றால்தான் தேர்தலுக்கு வேட்பாளர்களைத் தேர்வு செய்வதற்கு தங்கள் ஆட்களைக் கொண்டுவர முடியும் என்பதால்தான் இந்தப் போட்டா போட்டி.

ஒரிசாவில் இந்தச் சண்டை கட்டுமீறிப்போய் அட்ஹாக் கமிட்டியின் இரு செயலாளர்கள் கமிட்டியுடன் இனிமேல் ஒத்துழைக்கப் போவதில்லை என்று அறிவித்துள்ளார்கள். ஒரிசா சட்ட மன்றத்துக்கு நடந்த மூன்று உபதேர்தல்களிலும் இந்திரா காங்கிரஸ் வேட்பாளர்கள் தோல்வியடைந்த போதிலும் கட்சிக் கட்டுப்பாட்டை நிலைநிறுத்த வேண்டும் என்ற உணர்வு காங்கிரஸ் தலைவர்களுக்கு ஏற்படவில்லை.

டில்லியில் அட்ஹாக் கமிட்டியே கலைக்கப்பட்டு புதியகமிட்டி அமைக்கப்பட்டுள்ளது.

மகாராஷ்டிர மாநிலக் காங்கிரஸ் கமிட்டியில் ஏற்பட்ட தகராறில் அமைச்சர்களே ஒருவரைஒருவர் தாக்கி அறிக்கை விடுகின்றனர்.

இந்த மாநிலக் காங்கிரஸ் கமிட்டியைத் தூக்கி எறிய மாவட்டங்களில் தாம் சுற்றுப்பிரயாணம் செய்யப்போவதாக கூட்டுறவு அமைச்சர் முகைதி அறிவித்துள்ளார். கட்சிக் கட்டுப்பாட்டையே மீறுவதாக முகைதிமீது தொழில் அமைச்சரான பாட்டில் குற்றம் சாட்டியுள்ளார்.

மீர்காசிமை காஷ்மீர் அமைச்சரவையில் சேர்த்த பின்னரும் காங்கிரசில் குழப்பம் நீங்கவில்லை. பக்ஷிகுலாம்மகமது தலைமையிலுள்ள தேசிய மாநாட்டுக் கட்சியை காங்கிரசில் சேர்க்க வேண்டும் என்று மீர்காசிம் கோஷ்டி விரும்புகிறது. ஆனால் இந்த இணைப்புக்கு சென்ற வருடத்தில் முதலமைச்சர் சாதிக் கடும் எதிர்ப்புத் தெரிவித்தார்.

இப்போது இந்த இணைப்பை காங்கிரஸ் மேலிடமே ஆதரித்தபோதிலும் தாமதம் ஏற்பட்டுவருவது காஷ்மீர் காங்கிரசில் நிலவும் குழப்பத்தை வெளிப்படுத்துகிறது.

காங்கிரசுக்குள் இருந்த சிண்டிகேட் கோஷ்டி மட்டும் தான் பிற்போக்குக் கோஷ்டியா? இந்திரா காங்கிரஸ் முழுவதுமே பதவிவெறியர்களின் கூடாரம் என்பதை அக்கட்சிக்குள் தினம் தினம் நடைபெறும் குத்துவெட்டுகள் உலகுக்குப் பறைசாற்றுகின்றன.

—ஆ. ச.

## ஆசிரியருக்கு வரையும் மடல்

### தகுதியுள்ளோர் இருக்கும்போது தகுதியில்லாதோருக்கு பதவி உயர்வா?

ஐயா,

நடந்து முடிந்த பொதுத் தேர்தலுக்கு முன்பு தமிழக ஆட்சியாளர்கள் 6000 ஜூனியர் கிரேடு ஆசிரியர்களுக்கு, சீனியர்கிரேடு பதவி உயர்வும், 2000 இரண்டாம் நிலைத் தமிழாசிரியர்களுக்கு முதல் நிலை பதவி உயர்வும் அளிக்கப்படும் என்றும் அறிவித்தனர்.

ஆனால், இதுவரை 6000 ஜூனியர்கிரேடுகளுக்கு பதவி உயர்வு என்ன ஆனது என்பது தெரியவில்லை.

2-ம் நிலைத் தமிழாசிரியர்களுக்கு பதவி உயர்வு அளிப்பது பற்றிய கணக்கு எடுத்துள்ளனர் அதிகாரிகள். தமிழகத் 1572 பேருக்கு முதல்நிலைத் தகுதி பெற்றும் இரண்டாம் நிலையிலேயே உள்ளனர் என்று அரசாங்க அறிக்கை கூறுகிறது. ("தினமணி" — 13—5—71) அப்படியென்றால் இந்த 1572 பேருக்கும் பதவி உயர்வு கிடைக்க வேண்டும். இந்தப் புள்ளி விவர நிபுணர்களது உத்திரவானது எல்லா மாவட்ட முதன்மைக் கல்வி அதிகாரிகளுக்கும் அனுப்பப் பட்டு, அதன்படி ஒருசில (தஞ்சை உட்பட) மாவட்டங்களில் 1—5—71-ல் தமிழாசிரியர்களுக்குப் பதவி உயர் அளிக்கப்பட்டுள்ளது.

ஆனால் எங்கள் மாவட்டத்திலே இத்தகைய பதவி உயர்வு பட்டியலை வெளியிடாமல் 4 மாதகால அவகாசம் கேட்டு 1—9—71-ல் 159 பேருக்கான பதவி உயர்வுப் பட்டியலை வெளியிட்டனர் மாவட்டக் கல்வி அதிகாரிகள், முதல்வருடைய அறிவிப்புக்குப் (25—2—71) பின்,1971மார்ச்சில் எஸ். எஸ். எல். சி. தேர்வு பெற்று, ஜூன் மாதத்தில் வெற்றிப் பட்டியல் கிடைத்தவர்களுக்குப் பதவி உயர்வு அளிக்கப்பட்டுள்ளது.

முதல் அமைச்சருடைய அறிவிப்புக்கு ஓராண்டுக்கும் முன்பே முதல்நிலைத் தகுதி பெற்றவர்கள் வடஆற்காடு மாவட்டத்தில் உள்ள அரசு உயர்நிலைப் பள்ளிகளிலும், உயர் பள்ளிகளிலும் தனியார் உயர்பள்ளிகளிலும், நகராட்சி உயர் பள்ளிகளிலும் உள்ளனர் அவர்களுக்கு உயர் பதவி அளிக்காமல் இருக்கும்போது 71 மார்ச்சில் தேர்வு பெற்றவர்களுக்கு பதவி உயர்வு அளித்த மர்மம் என்ன? முதலமைச்சரின் அறிவிப்புக்குப் பின்னால் 4 மாதங்கள் கழித்து பட்டியல் தயாரித்து வெளியிடக் காரணம் என்ன? இது சம்பந்தமாக தமிழக ஆட்சியாளர் நடவடிக்கை எடுப்பார்களா?

இவண்.
பாதிக்கப்பட்ட ஓர் ஆசிரியன், வேலூர்.

**இந்திய வரலாற்றில் ஒரு கண்ணோட்டம் - 4**

# வைதிக நாகரிகத்தின் அன்னியத் தன்மை!

இந்திய நாட்டிற்கு அன்னியமான—முற்றிலும் பாரதத் தன்மை கொண்ட—ஒரு பண்பாடுள்ளது; அதன் ஆதாரம் வேதங்களும் உபநிடதங்களுமே; இங்கு படையெடுத்து வந்த இஸ்லாமியரும், பின் கிறிஸ்தவர்களும், இப் பண்பாட்டினை அழித்தனர்; இங்ஙனம் செல்கிறது இந்து மத வெறி கொண்ட வரலாற்று ஆசிரியர்களின் சிந்தனை.

இந்தப் பொய் ''வரலாற்றையே'' அடிப்படையாகக் கொண்டு ஜனசங்கத்தினர், பாரதமயமாக்கல் அல்லது இந்திய மயமாக்கல் எனும் கோஷம் எழுப்புகின்றனர்.

## இந்திய மயமாக்கல், வாதத்திற்கு மறுப்பு.

இவ்விதம், வரலாற்றுண்மைகளோடு பொருந்தாதென முன் கூறிய சித்திர நிகழ்ச்சிகள் தெளிவுறுத்துகின்றன. வேதங்களும் உபநிடதங்களும் தோன்றுமுன், [illegible] ஏற்றமடைந்த ஒரு சமூகமும் நாகரிகமும் நிலவினவெனும் உண்மை மறுப்பதற்கில்லை. தொல் பொருளாராய்ச்சியின் விளைவாக, இந்தியாவின் மற்ற பகுதிகளிலும், தொல் பொருள் சின்னங்கள் புலப்படலாம். அங்ஙனம் வெளிப்படாதிருப்பினும், வேத நாகரிகத்தைவிட தொன்மை வாய்ந்ததும், உயர்நிலையெய்தியதுமான, ஒரு பாரத நாகரிகம் சிந்து சமவெளியில் ஓங்கி வளர்ந்ததென்பதை மறுக்கவியலாது. அவ்வாறாயின், இந்தியமயமாக்கல் வைதிக நாகரிகம் வரை மட்டுமின்றி சிந்து நாகரிகம் வரை செல்ல வேண்டும்.

சிந்து நாகரிகம், பாரத நாட்டின் முதல் நாகரிகம் என்பது மட்டுமல்ல, வரலாற்றுண்மை. மிகப் பழமையுடையதென்றும், பறைசாற்றப்படும் வைதிக நாகரிகம் பின் நெருப்பெரிந்த இஸ்லாமிய, கிறிஸ்தவ, முதலானவை போல, இந்தியாவில் இறக்குமதி செய்யப்பட்ட சரக்கே என்பதனையும் வரலாறு தெளிவாக விளக்குகிறது.

## வைதிக நாகரிகத்தின் தோற்றம்.

பாரதமயமாக்கல் எனும் கொள்கையை பிரச்சாரம் செய்வோரின் கொடிய எதிர்ப்புக்கு ஆளானவர்களே, ''அன்னிய மதங்கள்'' என, அவர்களால் நம்பப்படும் இஸ்லாமிய, கிறிஸ்தவ மதங்களைத் தழுவிய மக்கள். ஆனால், வைதிக நாகரிகத்தைத் தோற்றுவித்த மனிதஇனமும், பின் இஸ்லாமிய—கிறிஸ்தவ மதங்களைத் தோற்றுவித்த மக்களும், வரலாற்று முற்காலத்தில் ஒரே நிலப்பரப்பில் அல்லது தேசத்தில் வாழ்ந்தவர்கள். ஆரியர் என்னும் பொதுப் பெயரால் அறியப்படும் இனங்களில், ஒன்று மேற்கு நோக்கிப் படையெடுத்துச் சென்றது. இது கிரேக்க ரோம நாகரிகங்களைத் தோற்றுவித்தது. வேறொன்று கிழக்கே சென்று சிந்து நாகரிகத்தை அழித்து, வைதிக நாகரிகத்தைத் தோற்றுவித்தது. முதல் நாகரிகங்களிலிருந்தே ஐரோப்பிய நாகரிகமும், இரண்டாவதிலிருந்து இந்திய நாகரிகமும் உருவாயின. இவைகளுக்கிடையே மேற்காசியாவில் இஸ்லாமிய நாகரிகமும், பிறந்து செழிப்புற்றது. இதுவே உண்மை.

இந் நிகழ்ச்சிப் போக்கின் பயனாக கி. மு. 1500-க்கும் 1400-க்கும் இடையே, வைதிக நாகரிகத்தின் முதல் நூலாகிய ரிக்வேதம் இயற்றப்பட்டதென அறிஞர்கள் கருதுகின்றனர். இந்நூலின் சில பகுதிகள் ஆரியர் இந்தியாவிற்கு வருவதற்கு முன் படைக்கப்பட்டிருக்கக்கூடும்: பாரத நாகரிகத்தின் இடமான ரிக் வேதத்தின் சில பகுதிகள், இன்று இஸ்லாமிய நாகரிகத்தின் மையங்களாகத் திகழும், சில பிரதேசங்களில் பிறந்தவைகளே.

வேதங்களும், உபநிடதங்களும், ஒரே காலகட்டத்தில் இயற்றப்பெற்றவையன்று. ஆதி நூலாகிய ரிக்வேதத்தின் மிக்க பகுதிகளும், ஆரியர்களின் இந்திய வருகைக்கு சிறிது முன்போ, வருகை நடந்த காலத்திலோ தோன்றியவை. பிற் பகுதிகளும் மற்ற வேதோபநிடதங்களும், ஆரியர் படிப்படியாக முன்னேறிய பல காலகட்டங்களில் இந்தியாவிலேயே இயற்றப்பட்டவை. இந்நூல்களை முற்றும் இன்று கிடைக்கும் தொல் பொருட்களின் துணையோடு விஞ்ஞான ரீதியாக ஆழ்ந்தாராயும் அறிஞனுக்கு ஆரியர்களின் வெற்றி உலாக்களும், அவைகளினின்றெழுந்த பாரத நாகரிகமும் பற்றிய புத்தறிவூட்டும் பல உண்மைகள் புலப்படும்.

## போர்புரியும் குழுக்கள் (கண சமுதாயங்கள்)

இவ்வாறு விஞ்ஞான முறையில் நடத்தப்படும் இந்திய சரித்திர ஆராய்ச்சி இன்றும் விரிவடைந்தில. இந்து மதவாதிகளுக்கும், ஏனைய மதவாதிகளுக்குமிடையே ஆரியர் கட்சிக்கும் ஏனைய இனத்தாருக்குமிடையே, அண்மைவரை ஆங்கில அரசு கட்சிக்கும் தேசியவாதிகளுக்குமிடையே, இங்ஙனம் அரசியலரங்கில் நிகழும் போட்டிகளும், போராட்டங்களும் சரித்திர ஆராய்ச்சியில் பிரதிபலித்திருக்கின்றன. இவ்வாறு ஒவ்வொரு கட்சியும் தன்னைப் புகழ்ந்தும், ஏனையோரை இகழ்ந்தும் பல காலங்களில் வரலாறு வரைந்திருக்கிறார்கள். ஆனால், தொல்பொருளாராய்ச்சிமூலம் புலப்படும் பௌதிகப் பொருட்களை முக்கிய அடிப்படையாகவும், இலக்கியம் முதலியவைகளைத் துணையாகவும் கொண்டு, விருப்பு வெறுப்பின்றி எதார்த்தமான அல்லது புறநிலைக்குப் பொருந்திய வரலாறியற்ற முயலும் அறிஞர்கள் அண்மைக் காலத்தில் தோன்றியிருக்கின்றனர். அவர்களின் ஆராய்ச்சிப்பயனாக வைதிக நாகரிகத்தின் தோற்ற—மலர்ச்சிகளைப் பற்றிய தெளிவான உண்மைகளை நாம் பெற்றிருக்கிறோம்.

இந்தியாவிற்கு வந்த, ஆசியர் எல்லோரும் ஒரே இனப் பிரிவைச் சார்ந்தவரன்று. அவர்கள் பல கோத்தரங்களை அல்லது கணங்களை (குழுக்களை)ச் சார்ந்தவர்களென ஆராய்ச்சி விளக்குகிறது. இந்த கண சமுதாயங்களும் பரஸ்பரம் போர் புரிந்தன. வசிப்பதற்கும் ஆடு மாடுகளை மேய்ப்பதற்கும் தேவையான நிலத்தை அடைய அவைகளுக்கிடையே போர் மூண்டு வந்தது.

## கட்டுக்கதைகளில் அடங்கிய வரலாறு

மேலும்ஏனைய இனத்தாரும், ஆரியர் முன்னேற்றத்திற்கு தடையாயமைந்தனர். இவர்களோடு தொடர்வாக போர் புரிந்தே ஆரியர்களுக்கு முன்னேற வேண்டியதாயிற்று. இங்ஙனம் தமது ஆரியகணங்களோடும், வேற்றினங்களோடும், போர் புரியநேர்ந்த ஆரியர்கள் போர்க்கலையில்மிக்கவனம் செலுத்தினர். வைதிக இலக்கியத் தலைவர்கள் எல்லோரும் போர்க்கலையில் சிறப்புற்றவர்கள் ரிக்வேதத்தின் மாபெரும் தலைவனாகிய இந்திரனின் வீரச் செயல்களைப் பற்றிய கதைகள் மனிதக் கற்பனையில் தோன்றியவையென ஒரு காலத்தில் கருதப்பட்டுவந்தன. அக்கினி பகவானின் சங்கார தாண்டவம் அல்லது அழிகூத்தைப்பற்றிய கதைகளும், கட்டுக்கதைகளென கருதப்பட்டு வந்தன. ஆனால் சிந்து நாகரிகத்தின் அழிவைக்குறிக்கும் தொல்பொருள் சின்னங்கள் கண்டுபிடிக்கப்பட்டபொழுது, இக்கதைகளில் வரலாற்றுண்மைகள் சிறிது மறைந்திருக்கின்றன என்று சரித்திராசிரியர்களால் விளக்கவியன்றது. அன்று நிலவிய எல்லா நாகரீகங்களையும், சமூகங்களையும் அழித்து நாடுமுற்றும் வெற்றி கொள்ளவெனும் கொடுஞ்செயலையே ஆரியர்கள் புரிந்தனர்.

## பிற்காலப் படையெடுப்புக்கள்

ஆரியர்களுக்குப்பின் வேறுபல இனத்தார் இந்தியாவிற்குள் படையெடுத்துவந்தனர் என்பதற்கு இஸ்லாமியரின் படையெடுப்புக்களே சான்றுகளாகும், இந்துநாகரிகத்தின் பல சின்னங்களை இஸ்லாமிய படையெடுப்பாளர்கள் அழித்தொழித்தனர் எனும் காரணத்தால், அவர்களை நாகரிகமற்றோர், கொடுங்கோன்மையர், என்று வரைந்து காட்ட இந்துவெறிகொண்ட வரலாற்றாசிரியர்கள் முயற்சி செய்திருக்கின்றனர். ஆனால், இஸ்லாமியர்கள் ''பாரத நாகரிகத்தை'' அழித்ததுபோலவே; வைதிக நாகரிகத்தை தோற்றுவித்த ஆரியர்களும், வேற்றினங்களையும், நாகரிகங்களையும் அழித்தனர் என்னும் உண்மையை மறைக்கின்றனர். செய்த பழி ஒன்றேயாயினும் இஸ்லாமியர்மீது மட்டுமே குற்றம் சாட்டுகின்றனர்.



இ. எம். எஸ். நம்பூதிரிபாட்

*சிந்து மக்கள் போன்ற ஆரியரல்லா சமூகங்களின் கருத்துப்படி முற்றும் ''அன்னியராகிய'' ஆரியர்கள் இங்குபடையெடுத்துவந்து அழிவுச் செயல்களே புரிந்தனர். அவர்களுடைய முன்னேற்றத்தை தடைசெய்ய முயன்ற இனங்களை அழிப்பதிலேயே தமது வீரத்தைக் காட்டினர். அவ்வாறு அழிவுற்ற சமூகங்களில் சில, சிந்து மக்களைப் போன்று ஆரியர்களைவிட உயர்ந்த நாகரிகமுடையவைகளே.*

### பாரத நாகரிகம்

ஆனால் சிந்து மக்கள் உள்பட அதுவரை நிலவிய வேறு சமூகங்களின் அமைப்புகளைவிட ஆரியர்களின் சமூக அமைப்பு சிறந்து விளங்கியது. ஒவ்வொரு சிறு நிலப்பகுதியிலும் நிலை கொண்ட சிந்து மக்கள் முதலிய சமூகங்களுக்குப் பதிலாக சில பத்தாண்டுகளில் இன்றைய மேற்கு பாகிஸ்தானத்தின் மேற்கெல்லையினின்று கிழக்குபாகிஸ்தானத்தின் கிழக்கெல்லை வரை பரவிய ஒரு புது சமுதாயத்தையும் நாகரீகத்தையும் படைக்க அவர்களாலியன்றது இந்த காலகட்டத்தில் ஆரியர் தென் இந்தியாவிலும் பரவிச் சென்று, அங்கு உயர்ந்து விளங்கிய திராவிட சமூகத்தையும் நாகரிகத்தையும் பேரளவில் தமது செல்வாக்கின்கீழ் கொணர்ந்தனர்.

சுருங்கக்கூறின், உயர்நிலையெய்தியவை யெனினும், சிற்றெல்லைகளுக்குள் நிலவிய ஆரியரல்லா சமூகங்களையும், நாகரிகங்களையும் அழித்து, இந்திய உபகண்டம் முற்றும் பரவிய ஒரு பெரியஎல்லையுடைய நாகரிகம் அமைத்தனர் ஆரியர்.

இந்நிகழ்ச்சிப் போக்கினால் அதுவரை அன்னியராயிருந்த ஆரியர், தாமே பாரத மக்களாக மாறினர். தமது முன் தேசங்களின் சமூக நாகரிகங்களோடு நிலவிய உறவையும் சிறுகச் சிறுக அறுத்துக் கொண்டார்கள். பதிலாக தமது புது வாழ்விடங்களில் வசித்து வந்த வேற்று சமூக நாகரிகங்களினின்று பலவற்றை ஏற்றனர். ரிக் வேதத்தைச் சார்ந்த முதலிலக்கியங்கள், ஏனைய வேதங்கள், உபநிடதங்கள், இதிகாசப் புராணங்கள் முதலியவைகள் மூலம் அவர்கள் உருப்பெறச்செய்த பாரத நாகரிகத்தில் ஆரியரல்லா வேற்றினங்களின் நாகரீகத்தினின்றும் பல பகுதிகளை அவர்கள் ஏற்றுவந்திருக்கிறார்கள்.

அங்ஙனம் வேற்றினங்களோடு நடந்த பல போர்கள். ஆரியரல்லாதோரின் தோல்விகள். அவர்களோடு ஒன்றிவாழ அவர்கள் உணர்வொன்றச் செய்த முயற்சிகள்—இவைகளின் பயனாகப் பிறந்த குழந்தையே பாரத நாகரீகமெனும் இந்து நாகரீகம்.

(தொடரும்)

தமிழாக்கம்: ஆனந்த்

# சீனத்துடன் உறவு மறு பரிசீலனை தேவை!

**சீனவும் - இந்தியாவும் உறவு வைத்துக் கொள்ள வேண்டுமென்ற ஆர்வம் மேலோங்கிக் கொண்டிருக்கும் இக் கட்டத்தில் - இந்தியத் தரப்பிலிருந்து எத்தகைய கருத்துக்கள் வெளியாகி வருகின்றனஎன்பதை வாசகர்கள் அறிந்து கொள்ள வேண்டியது அவசியம்.**

**சீனத் தரப்புக் கருத்துக்கள் எப்படியிருக்கின்றன என்பதைப் பற்றி, திருமதி ஹான்-சூயின் 'இந்தியன் எக்ஸ்பிரஸ்' பத்திரிக்கையில் எழுதிய கட்டுரையை 21—10—71 ''தீக்கதி''ரில் வெளியிட்டோம்.**

**இந்தியத் தரப்பு கருத்துக்கள் எப்படி இருக்கின்றன என்பதைப் பற்றி 1970 நவம்பர் 14-ல் 'தினமணி'யில் திரு. ஜே. கோல்-ஹோ எழுதிய கட்டுரையை பிரசுரிக்கிறோம்.**

— ஆசிரியர்.

### கோல் - ஹோ கட்டுரை !

### சீன பற்றிய பிரச்னை

முதல் முதலாக இந்தியா இப்போது முயல வேண்டியது, இந்தியா-சீன பகைமையுணர்ச்சிக்கு மாற்றுக் கண்டுபிடிப்பது.

இவ்வாறு சீனவுடன் சமரசம் ஏற்பட வேண்டுமாயின், அவர்கள் ஏற்கனவே தம்வசமாக்கிக் கொண்டுள்ள அக்ஸாய்-சின் என்ற பகுதிக்கு அவர்கள் கொண்டாடும் உரிமையை ஒப்புக்கொள்ள வேண்டியிருக்கும். அக்ஸாய்-சீன் என்று ஒரு நிலப்பரப்பு இருப்பது பற்றியே பல இந்தியருக்குப் பிரத்தியட்ச ''உணர்வு'' இருந்ததில்லை. அந்தப்பகுதியில் சீனவானது சாலைகள் அமைத்துள்ளது என்ற உண்மை வெளியிடப்பட்ட பிறகுதான் நம்மில் பலருக்கு அது இந்திய எல்லைக்குள் இருப்பதானஇடம்என்ற 'உணர்ச்சி' ஏற்பட்டது.

இந்த அக்ஸாய்-சீன் பகுதியானது சீனவுக்கு மிகவும் முக்கியமான நிலப்பரப்பு. அக்ஸாய்-சீன் வழியாகத்தான் சீனவானது திபேத் பகுதியுடன் தொடர்பு கொள்ள முடியும். ஆகையால் சீன இந்த இடத்தைக் கைவிட ஒப்புக் கொள்ளப் போவதில்லை. இந்த இடத்தை, நாம் சீனவுடன் போர் புரிந்து மீட்பது என்பதும் எந்த இந்தியனும் நிதான புத்தியுடன் கடைப்பிடிக்க முடியாத ஒரு லட்சியமாகும்.

இந்த இடம் இந்தியாவைச் சேர்ந்ததே என்ற கோரிக்கைக்குப் பிற நாடுகளின் உடன்பாட்டைப் பெறுவது மிகவும் கஷ்டமான முயற்சியாகும். சீனவின் ஆதிக்கம் விஸ்தரிக்கப்படலாகாது என்பதில் இதுவரை அக்கறைகாட்டி வந்துள்ள அமெரிக்காவும் சரி, இந்தப் பகுதியின் வரலாற்றினைப் பற்றி அறிந்துள்ள பிரிட்டனும் சரி, இவ்விஷயத்தில் நமது கோரிக்கை சரிதான் என்று சொல்ல முன்வரவில்லை.

ஆகையால் இந்தப் பகுதியில் சீனவின் கோரிக்கையை அல்லது ''பாத்தியதையை'' நாம் ஏற்றுக் கொள்ள உடன்பட்டு, அதற்கு ஈடாக, சீனவிடமிருந்து சில உத்தரவாதங்கள் கோருவது என்பதே நமது கொள்கையாக இருத்தல் வேண்டும்.

இந்தியாவின் உள் நாட்டு விவகாரங்களில் சீன தலையிடாது என்ற வாக்குறுதியையும் இந்தியாவின் ''வடகிழக்கு'' (நேபா)பகுதியில் இந்தியாவை பிளக்க விரும்பும் சக்திகளுக்கு சீன ஊக்கமளிக்காது என்ற வாக்குறுதியையும், கொடுத்தால் அக்ஸாய்-சீன் விசயத்தில் இந்தியா தன் கோரிக்கையை வற்புறுத்தாது என்ற பாணியில் உடன்பாடுகாண முயல வேண்டும். இதுதான் காரிய சாத்தியமான குறிக்கோளாக அமையும்.

### சீனவுடன் ''ஸ்தானிக உறவு''

இப்போது இந்தியாவுக்கும் சீனவுக்குமிடையே 'ஸ்தானிக உறவு'' இல்லாமல், சம்பிரதாயமான சில தொடர்புகளுக்கு மட்டுமே ஏற்பாடு இருக்கிறது. இந்த நிலைமை மாறி ''ஸ்தானிக உறவு'' ஏற்படுத்தவேண்டும்.

நாம் தான் முதலில் ஸ்தானிகரை வாபஸ் பெற்றோம். ஆகையால் பரஸ்பரம் ஸ்தானிக உறவு ஏற்பட வேண்டுமானால் அதற்கான பிரேரணை நம்மிடமிருந்துதான் கிளம்ப வேண்டியிருக்கும்.

இவ் விஷயத்தில் சீன எவ்வளவு தூரம் உறவுக்குத் தயாராக இருக்கிறது என்பதுபற்றி நாம் நாசூக்காக ஆழம் பார்க்க வேண்டும்.

### ஸ்தானிக உறவுடன் வர்த்தக உறவும்

இரண்டு நாடுகளுக்குமிடையே மீண்டும் ஸ்தானிக உறவு ஏற்படுமாயின் அதன் விளைவாகப் பல நன்மைகள் கைகூடலாம். அத்துடன் பரஸ்பரம் வர்த்தக உறவுக்கும் முயல்வது அவசியமாகும் ஒரு ''ஈராண்டு'' அல்லது ''மூன்றாண்டு'' உடன்பாட்டின் மூலம் இரண்டு நாடுகளும் பரஸ்பரம் ஏற்றுமதி இறக்குமதிகளைப் பெருக்கி ஏற்றுமதியும் இறக்குமதியும் ஈடுகட்டும்படியான ஒரு வர்த்தக ஏற்பாடு உருவாவது நமக்குப் பயனுள்ளதாக இருக்கும். அரசியல் மனஸ்தாபங்கள் நீங்குவதற்கு வர்த்தக உடன்பாடுகள் பயனுள்ள சூழ்நிலையை உருவாக்கக்கூடும். இந்த வர்த்தக உடன்பாடு எவ்வாறு செயல்படுகிறது, என்ன மாறுதல் செய்யலாம் என்பது பற்றி இடையிடையே கூடிப் பேசுவதற்கும் ஏற்பாடு இருத்தல் பொருந்தும்.

இந்தியா-சீன உறவை சரிப்படுத்திக்கொள்வதற்கு இந்தியா ஒரு முயற்சியும் எடுக்க முன் வராதிருப்பதற்கு ரஷ்யாவின் ''புத்திமதி'' தான் காரணமோ என்ற ஒரு ஐயப்பாட்டினையும் சில சமயங்களில் சிலர் பிரஸ்தாபிக்கிறார்கள். இந்த ஐயப்பாட்டுக்கு இடமிருக்கிறதா என்பது நிச்சயமாகச் சொல்ல முடியாத ஒன்றாகும்.

### ரஷியாவின் மனப்பான்மை

சென்ற உலக யுத்தத்தின் போது ஜெர்மன் படைகள் ரஷ்ய மண்ணின் மீது நிகழ்த்திய போரினையும், அதனால் ரஷ்யாவுக்கு ஏற்பட்ட துயரம் பொருட்சேதம் ஆகியவற்றையும் பொருட்படுத்தாமல் ரஷ்யாவானது மேற்கு ஜெர்மனியுடன் உறவு ஏற்படுத்திக் கொண்டு ஆக்கிரமிப்புத் தவிர்ப்பு ஒப்பந்தம் செய்து கொள்கிறது.

சீனவின் வசைப் புராணத்தையும் எல்லைப்புறச் சச்சரவுகளையும் கருதி அதனுடன் ஸ்தானிக உறவை ரத்து செய்து கொண்ட ரஷ்யா ஆறு ஆண்டுகளுக்குப் பிறகு இப்போது மறுபடியும் சீனவுடன் ஸ்தானிக உறவு ஏற்படுத்திக்கொள்கிறது. இவ்வாறெல்லாம் பிறநாடுகள் நடந்து கொள்வதைக் காணுகின்ற நாம், சீன பற்றிய நமது கொள்கையை மாற்றியமைத்துக் கொண்டு, புதிய பிரேரணைகளின்அடிப்படையில் ஏன் சீனவுடன் சாதாரண உறவுக்கு முயலக்கூடாது.

# இந்தியாவுக்கும் சீனுவுக்கும் தூதர் பரிவர்த்தனை ஏற்படும்!

## டில்லி வட்டாரத் தகவல்!

புதுடில்லி, அக். 22— இந்தியாவும், சீனவும் விரைவில் முழு அளவிலான தூதரக உறவுகளை ஏற்படுத்தும் என்று விஷயமறிந்த வட்டாரங்கள் அறிவிக்கின்றன.

இந்தத் திட்டத்துக்கு சீன சம்மதம் தெரிவித்துள்ளது. இதற்கான ஏற்பாடுதான் செய்யவேண்டியுள்ளது. யார் முதலில் தூதரை நியமிக்க வேண்டும் என்பதில்தான் வேற்றுமை ஏற்பட்டிருப்பதாகத் தெரிகிறது.

இந்தியா முதலில் தூதரை அனுப்பவேண்டும் என்றும் அதற்குப்பின் சீனவும் அனுப்பும் என்றும் ஒரு கட்டத்தில் சீன வற்புறுத்தியுள்ளது. இதற்குக் காரணமாக 1961-ல் பீக்கிங்கிலிருந்து திரு ஜி. பார்த்தசாரதியை இந்தியா முதலில் திரும்பப் பெற்றது என்றும் அதற்குப்பின் பலமாதங்கள் கழித்தே புதுடில்லியிலிருந்து தனது தூதர் பான்-ஜூலியை திரும்பப் பெற்றது என்றும் சீன வாதிக்கிறது என்பது தெளிவு. அதற்குப் பின் இரு நாடுகளுக்கும் இடையே துணைத் தூதரக அதிகாரி மட்டத்திலேயே உறவு இருந்து வருகிறது.

கடந்த செவ்வாயன்று பத்திரிகை நிருபர்கள் கூட்டத்தில் பேசிய பிரதம மந்திரி இந்திரா காந்தி இந்தியா சம்பந்தமாக சீனவின் நிலை படிப் படியாக மாறியுள்ளது என்று கூறினர்.

சென்ற வாரம் பீக்கிங்குச் சென்ற துணைத் தூதரக அதிகாரி புதுடில்லிக்குத் திரும்பியதும் விரைவில் தூதர் பரிவர்த்தனை பற்றி அறிவிப்பு வெளியாகும் என்று ராஜதந்திர வட்டாரங்கள் கருதுகின்றன.

இதை உறுதிப்படுத்தவோ மறுக்கவோ அதிகாரிகள் தயாராகயில்லை. ஆனால் இந்தியாவும் சீனவும் மீண்டும் தூதர்களைப் பரிவர்த்தனை செய்து கொள்ளும் என்று பார்வையாளர்கள் கருதுகின்றனர். பத்திரிகை நிருபர்கள் கூட்டத்தில் பேசிய பிரதமர், இந்திரா காந்தி இது சாத்தியமாகாததல்ல என்று கூறினர்.

பங்களாதேஷ் போராட்டத்தை ஒடுக்க

# வடகொரியா ஆயுதம் சப்ளை செய்யவில்லை

## தூதரக அதிகாரி அறிவிப்பு

புதுடில்லி, அக். 23— பாகிஸ்தான் ராணுவ ஆட்சிக்கு, பங்களாதேஷ் சுதந்திரப் போராட்ட வீரர்களை ஒடுக்குவதற்கு வடகொரிய அரசு ஆயுதங்கள் கொடுத்து உதவுவதாக வெளியிடப்பட்ட செய்தி அடியோடு பொய்யானது என்று இங்குள்ள வடகொரியா தூதுவர் அறிவித்தார்.

இந்தச் செய்தி, அமெரிக்காவிலும், தென்கொரியாவாலும் செய்யப்பட்ட பொய்ப் பிரச்சாரம் என்பது வெட்ட வெளிச்சமாகியிருக்கிறது.

இந்திய மக்களுக்கும், வட கொரிய மக்களுக்கும், உள்ள நல்லெண்ணத்தையும் நல்லுறவையும், கெடுப்பதை நோக்கமாகக் கொண்டு செய்யப்பட்ட பொய்ப்பிரச்சாரம் இது என்பது தெளிவாகி விட்டது. டெல்லியிலிருக்கும் வட கொரிய தூதரகம், ஒரு அறிக்கையில் கூறுகிறது.

கொரிய ஜனநாயகக் குடியரசு, பாகிஸ்தானுக்கு. ஆயுத உதவி அளிப்பதாக, வாஷிங்டனிலிருந்து, வெளியான செய்தி, பொய்யானது. இந்திய மக்களுக்கும், கொரிய மக்களுக்கும் உள்ள நட்புறவை குலைக்கும் முயற்சியாகும் இது, அமெரிக்காவிலும், தென் கொரியாவிலும் உள்ள அரசுகளின், திட்டமிடப்பட்ட பொய்ப்பிரச்சாரமாகும்இது— ஆதாரமற்றபொய் என்று அறிக்கையில் கூறப்பட்டிருக்கிறது.

### நெருப்பைத் தடுக்கும் நுண்ணுயிர்கள்

மாஸ்கோ, அக்- 21— சுரங்கங்களில் அடிக்கடி தீப் பிடிப்பதற்கு காற்று ஒரு காரணமாகும். இரும்பு பைரட்டுகள் அல்லது நிலக்கரியில் ஆக்ஸிஜன் ஊடுருவிச் செல்லும் பொழுது, அவை தாமாகவே தீப்பற்றிக் கொள்ளுகின்றன இந்த அபாயத்தைத் தடுப்பதற்குச் சுரங்கத் தொழிலாளர்கள் சில வழிகளைக் கையாள்கின்றனர். சுரங்கங்களில் கான்கிரீட் சுவர்கள் எழுப்பப்படுகின்றன. ஓட்டைகள் சிமெண்டால் அடைக்கப் படுகின்றன. எனினும் பாறைகள் சிறிது அசையும் பொழுதோ, பூமிக்கு அடியில் நடுக்கங்கள் ஏற்படும் பொழுதோ, மேற்கண்ட சிமெண்டுப் பூச்சு பழுதாகி விடுகிறது.

எனவே, நுண்ணுயிர்களின் உதவியால் ஓர் உறுதியான பாதுகாப்பைச் சோவியத் விஞ்ஞானிகள் உருவாக்கியுள்ளனர். ஒரு நிலக்கரிக் குவியலின் மீது பாக்டீரியாவைக் கொண்ட கரைசலைத் தெளித்தால், ஒரு கெட்டியான படலம் அதை மூடி விடுகிறது. இந்தப் படலம் உடைந்து பிளவு ஏற்பட்டால் அந்தப் பிளவை நுண்ணியிர்கள் உடனே நிரப்பி விடுகின்றன.

### சோவியத் ஜெனரேட்டர்

லெலின்கிராடு, அக். 23— ஆந்திராவில் கட்டப்படும் கீழ் சிலேரு மின்விசை நிலையத்துக்கான ஜெனரேட்டர்கள் லெலின்கிராடு ''எலக்டிரோசிவா'' ஆலையில் தயாரிக்கப்படுகின்றன. ஆந்திராவிலிருந்து இங்குவந்துள்ள மின்விசை நிபுணர்கள், இந்த ஜெனரேட்டர்களின் பகுதிகளை நேற்று பார்வையிட்டனர். இந்த ஆலை ஐம்பதுக்கு மேற்பட்ட நாடுகளுக்கு ஜெனரேட்டர்களை சப்ளைச் செய்துள்ளது.

ஆந்திர அரசாங்க மின்விசை வாரியத்தின் தலைவர் எஸ். ஏ. கிருஷ்ணசாமி தலைமையில் இங்கு வந்துள்ள தூதுக் குழுவினர், தொழில் நுட்ப விவரங்களை ஒருங்கிணைப்பர். கீழ் சிலேரு நீரியல் மின்விசைத் திட்டத்தில் இந்திய நிபுணர்களும், சோவியத் நிபுணர்களும் பணியாற்றுகின்றனர். இரண்டு ஜெனரேட்டர்செட்டுகளுக்கான புனைவரைவுத் திட்டங்களை லெலின்கிராடு சித்ரோபரோயெக்த்' கல்லூரியின் எஞ்சினியர்கள் தயாரித்துள்ளனர். இந்திய எஞ்சினியர்கள் மற்றும் இரு ஜெனரேட்டர் செட்டுகளுக்கான புனைவரைவுத் திட்டங்களைத் தயாரிக்கின்றனர்.

தூதுக்குழுத் தலைவர் எஸ். ஏ. கிருஷ்ணசாமி 'டாஸ்' நிருபரிடம் பேசுகையில், 'இந்தியப் புனைவரைவாளர்களுக்கும் சோவியத் புனைவரைவாளர்களுக்கும் இடையே பரிபூரண இணக்கம் நிலவுகிறது. கீழ் சிலேரு நிலையத்திற்கான வேலைகள் முழு மூச்சுடன் நடந்து வருகின்றன; எங்கள் பணியில் முற்போக்கானமுறைகள் பயன்படுத்தப்படுகின்றன' என்றார்.

### பஸ்கள் அரசுடைமை மசோதா

சென்னை, அக். 21— 50 அல்லது அதற்கும் அதிகமான பஸ் பெர்மிட்டுகளை வைத்துக் கொண்டிருக்கும் மோட்டார் வாகனங்களின் உரிமையாளர்களுடைய பஸ்களை ஆர்ஜிதம் செய்ய - தமிழ்நாடு பஸ்கள் ஆர்ஜிதமசோதா என்ற புது மசோதா தமிழ்நாடு சட்ட மன்றத்தில் தாக்கல் செய்யப்பட்டது.

மேற்கண்ட பஸ் கம்பெனிகளில் வேலை செய்யும் ஊழியர்களுக்கு அரசாங்கக் கம்பெனி அல்லது கார்ப்பரேஷனின் கீழ் தொடர்ந்து வேலையளிக்க புது மசோதாவில் வகை செய்யப்பட்டிருக்கிறது.

இதன்படி ஆர்ஜிதம் செய்யப்படும் நிறுவனத்தில் அறிவிக்கப்படும் தேதிக்கு முந்திய தேதியில், முற்றிலும் அந்த நிறுவனம் சம்பந்தமாக வேலைக்கு அமர்த்தப்பட்டிருக்கும் ஒவ்வொரு ஊழியரும், சர்க்காருக்குச் சொந்தமான கம்பெனி கார்ப்பரேஷனின் கீழ் தொடர்ந்து தமது பதவியில் அல்லது சர்வீஸில் இருப்பார்கள். தற்போதுள்ள அதே வேலை நிலைமையும் நிபந்தனைகளும் நீடிக்கப்படும். அவர்கள் உள்ள நிறுவனத்தை சர்க்கார் எடுத்துக் கொள்ளாமல் இருந்தால், அந்த ஊழியர்களுக்கு இருந்திருக்கக்கூடிய பென்ஷன், கிராச்சுட்டி மற்றும் இதர உரிமைகள் அவர்களுக்கு நீடித்து இருக்கும்.

அரசாங்கக் கம்பனி அல்லது கார்ப்பரேஷனின் கீழ், ஊழியருடைய வேலைக்கு முடிவு ஏற்படுத்தப்படும் வரை அல்லது அவரது ஊதிய நிபந்தனைகள் மாற்றியமைக்கப்படும் வரை மேற்படி உரிமைகள் நீடித்திருக்கும்.

## கண்ணோட்டம்

# வருமான வரி அதிகாரமும் வழக்கறிஞர் அமைச்சரும்!

முதலமைச்சர் மு. கருணாநிதி, எந்தக்கூட்டத்தில் பேசினாலும் சரி, "நான் ஒரு சாமானியன்; எனது சக அமைச்சர்களும் சாமானியர்களே; கழக அரசு சாமானிய மக்களின் அரசு; கழக அரசின் பொருளாதாரத் திட்டம் கோடீஸ்வரர்களையும் மன்னர்களையும் காப்பதல்ல. மண்குடிசையில் வாழும் மக்களை வாழ்விப்பதே யாகும்" — என்று, காது கொடுத்துக் கேட்போர் "ஆஹா! ஆஹா!" என்று சொக்கிப்போகும்படிச் சொற்பொழிவு நிகழ்த்துவார்.

முதலமைச்சரின் குடும்பப் பத்திரிகையான முரசொலியோ, அவரது பேச்சுக்கு பொன்பூச்சுப் பூசி "எங்கள் கழக அரசு எப்பேர்ப்பட்டது தெரியுமா!

"ஒட்டி உலர்ந்துபோன ஏழையின் வயிற்றுக்கு உணவாகவும்—நசிந்து இற்றுப்போன ஏழையின் இதயத்திற்கு ஒரு ரோஜாவாகவும் இருப்பதுகழக அரசே!"—என்று—"ரொட்டியும் ரோஜாவும்"—என்று தலைப்புக் கொடுக்கும்; தலையங்கமும் தீட்டும்.

இவ்வாறு, கழக ஆட்சியின் கீழே—கலைஞர் டாக்டரின் தலைமையின் கீழே—புதுயுகம் பூக்கப்போகுது! பொற்காலம் பிறக்கப்போகுது!—என்றெல்லாம் முதலமைச்சரும் பேசுகிறார். முரசொலியும் எழுதித்தள்ளுகிறது.

குடிசை மக்களையும் குப்பத்து மக்களையும் கோணிப்பை போட்டுப்பிடிக்க, இந்த நாடகம் ஒருபுறம் நடந்துகொண்டேயிருக்கிறது.

அதே சமயத்தில்......தொழில் அமைச்சர் மாதவன்—அதாவது, 'தொழில் முதலாளிகளுக்கெல்லாம், லைசென்ஸ் வாங்கிக் கொடுப்பது எப்படி? அவர்களுக்கு முதலீடுகுவிய, வழி வகை செய்வது எப்படி? என்பதிலேயே கண்ணும் கருத்துமாக ஓடி ஆடக்கூடிய தொழில் அமைச்சர் மாதவனார்—முதலாளிகள் மத்தியிலே என்ன பேசிவருகிறார் தெரியுமா? இவர்பேச்சுக்கு முன்னால், முன்னாள் மத்தியநிதியமைச்சர் மொரார்ஜி தேசாயும் பிச்சை வாங்கவேண்டும்! மத்திய இந்நாள் நிதியமைச்சர் சவானும் பிச்சை வாங்கவேண்டும்! அப்படிப் பேசியிருக்கிறார். என்ன பேசினார்? எங்கே பேசினார்? எப்போது பேசினார்?—என்று கேட்கிறீர்களா! கேளுங்கள்.

1971-ம் ஆண்டிலே, அக்டோபர்த் திங்களிலே, 9-ம் நாளிலே — கோயமுத்தூர் நகரிலே — பஞ்சாலைத் தொழில் பற்றிய கருத்தரங்கிலே—ஆலை முதலாளிகள் அணிவித்த மாலைகளைச் சுமந்துகொண்டு, மாதவனார் பேசினார்! எப்படி?

"மத்திய சர்க்காரால் விதிக்கப்பட்டுள்ள வருமானவரி வசூலடணத்தில் பெரும்பகுதியை, அந்தந்த மாநிலங்களே அடையும்போது, அந்த வரி விதிப்பு அதிகாரத்தையே மாநில அரசுக்கே மாற்றிடாமல்—மத்திய அரசே வைத்துக் கொள்வதற்கு ஏதாவது காரணம் இருக்க முடியுமா?"—என்று கேட்டார்.

கேட்டு விட்டு மேலும் கேட்டார், வருமானவரி விதிக்கும் அதிகாரத்தை மாநில அரசுக்கு மாற்ற வேண்டுமென்று—அலலாவிட்டால், வசூலிக்கப்படும் வருமானவரிப் பணம் முழுவதையும் மாநிலத்திற்கே கொடுத்துவிட வேண்டுமென்றும்!— கேட்டார்.

இதுவரை நமக்கு உடன்பாடுதான். ஏனென்றால், மத்திய அரசின் மொத்த வருமானத்தில் முக்கால்பங்கு மாநிலங்களுக்கே பகிர்ந்தளிக்கப்பட வேண்டுமென்கிறோம் நாம்! கால்பங்குதான் மத்திய அரசு வைத்துக்கொள்ளவேண்டும் என்கிறோம் நாம்! மத்திய அரசிடம், பாதுகாப்பு, போக்குவரத்து, கரன்சி, வெளியுறவு ஆகியவை தவிர—வேறு எந்த அதிகாரமும் இருக்கக்கூடாது, மற்றெல்லா அதிகாரங்களும் மாநில அரசுகளுக்கே இருக்க வேண்டும் என்று வற்புறுத்தி வருகிறோம் நாம்!

ஆகவே, வருமானவரிப் பட்டியலையும் மாநில அரசின் வரிப்பட்டியலில் சேர்க்குமாறு மாதவன் கோருவதை ஆதரிக்கிறோம்.

ஆனால்......ஆனால்......ஆனால்......மாதவன் ஓட்டிய ரயில் வண்டி இவ்வளவு தூரமதான் தண்டவாளத்தில் ஓடுகிறது, அப்புறம்......தண்டவாளத்தை விட்டுச்சறுக்கி தரையில் புதையத் தொடங்கிவிட்டது. என்ன என்று கேட்கிறீர்களா? கேளுங்கள்,

வருமானவரி விதிக்கும் அதிகாரம் மாநில அரசுக்கு வேண்டுமென்று கர்ச்சிக்கிறாரே, அந்தக் கர்ச்சனை எதற்காக? எந்த நோக்கத்திற்காக?—என்ற கேள்விகளைத் தொடுக்கும் போதுதான் குட்டு உடைபடுகிறது.

மாதவன் அதே பேச்சிலே அதே மூச்சிலே— "மத்திய அரசின் வரிவிதிப்பு முறைகளானது, புதிய தொழில்களில் முதலீடு செய்ய விரும்பும் திறமைசாலிகளுக்கு ஊக்கமூட்டுவதாயில்லை. இப்போது இருக்கின்ற தொழில்களை விரிவுபடுத்திடவும் முடியாதபடி அதைரியப்படுத்துகிறது!" என்று கூறினார்.

இப்படி புதுமுதலாளிகளுக்கும் பழைய பெருச்சாளிகளுக்குமாக பொத்தாம் பொதுவாகப் பேசி வக்காலத்து வாங்கிய வழக்கறிஞர், இனி பச்சையாகவே நகர்கிறார், பாருங்கள்!

"பெருங்கொண்ட கம்பெனிகளுக்கும் சரி, தனிப்பட்ட முதலாளிகளுக்கும் சரி, முதலீடு செய்ய பணம் சேமிக்கமுடியாதபடி மத்திய அரசு வரிவிதித்து விடுகிறது துரதிர்ஷ்டவசமாக, வரிவிதிப்பு மூலம் பொருளாதார ஏற்றத்தாழ்வை குறைக்கப்போகிறோம் என்ற தத்துவமானது நமதுநாட்டிலே மேலோங்கிக் கொண்டிருக்கிறது"—என்று சறுக்கினார்.

அதாவது, முதலாளிகள் மூலதனம் திரட்ட முடியாத அளவுக்கு, அவர்கள்மீது மத்திய அரசு அதிக வரிவிதிப்பதாகக் குறைகூறுகிறார். அப்புறம்தான் முத்தாய்ப்பு வைக்கிறார்.

வருமானவரி விதிக்கும் அதிகாரத்தை மாநில அரசுக்கு மாற்றினால் மாத்திரமே, தொழில் வளர்ச்சியைத் தூண்டிவிட முடியுமென்றும்—அப்புறம்தான், முதலாளிகள்தொழில்களில் முதலீடு செய்யும் அளவுக்கு கூடுதல் சேமிப்பு செய்யத் தக்கவாறு வரிவிதிப்பு முறைகளை நாங்கள் சீரமைப்புச் செய்வோம்"—என்று கூறினார், அதாவது...அதாவது...

அதாவது, வருமானவரி விதிப்பு அதிகாரம் கழக அரசிடம் வந்தால், மத்திய அரசு மாதிரி முதலாளிகள்மீது அதிக வரி போடமாட்டார்களாம். குறைவாகத்தான் போடுவார்களாம். அதனால் முதலாளிகளுக்கு கூடுதல் சேமிப்பு சேருமாம். அந்தப் பணத்தைக் கொண்டு அவர்கள் தொழில்களை வளர்ப்பார்களாம்!......இதுதான் தி. மு.க. வின் கூடுதல் அதிகாரக்கோரிக்கையின் குட்டு!

கழக அரசின் பொருளாதாரக் கொள்கை கோடீஸ்வரர்களைக் காப்பதல்ல என்கிறார் கலைஞர்...மாதவனாரோ, முதலாளிகளின் தொந்தி தொப்பைகளை உப்பவைக்க, காற்றடித்துக்கொண்டிருக்கிறார்!

மாதவனாரே! மந்திரியாரே! மத்திய அரசு என்னமோ முதலாளிகள் மீது தாங்கமுடியாத வரிகள் போட்டிருப்பதாகக் குமுறி அழுகிறீர்களே, குற்றம் சாட்டுகிறீர்களே! இது உண்மைதானா? புள்ளி விபரம் சொன்னால் உங்களுக்குப் புரியுமா?

1950-51-ம் ஆண்டிலே மக்கள் உபயோகிக்கும் பண்டங்களின் மீது விதிக்கப்பட்ட மறை முகவரி 50 சதமானம் என்றால்-அதே ஆண்டிலே, பணக்காரர்கள் மீது விதிக்கப்பட்ட நேர் முகவரி 50 சதமானமாக இருந்தது. அன்று இரண்டும் சரி சமம்! அப்புறம் என்ன கதை?

1960-61-ம் ஆண்டிலே முதலாளிகள் மீது போட்ட வரி 33 சதமாகக் குறைந்தது. அப்புறம்...?

1970-71லே கதை எங்கு வந்து நிற்கிறது தெரியுமா? செல்வந்தர்கள் மீதுள்ள வரி 19 சதமாகத் தேய்ந்து விட்டது!

இதே ஆண்டிலே மக்கள் மீது போட்டுள்ள வரி எவ்வளவு தெரியுமா?...81 சதமானம்! மந்திரியாரே, நினைவில் கொள்ளுங்கள், நெஞ்சினில் பதியுங்கள்!...81 சதமானமய்யா, 81 சதமானம்! இந்த வருடம் இதைவிடக் கூடுதலாகத்தான் இருக்கும்; அந்த அளவு தொப்பைகளுக்கு வரி குறைவாகத்தான் இருக்கும்!

பச்சையாகச் சொன்னால் 1947-48 வாக்கில் மக்கள் மீது போடப்பட்டிருந்த வரி 50 கோடி ரூபாய்! அது 1967-68-ல் ரூ 1500 கோடியாக ஏறிவிட்டது. அதாவது 20 வருடங்களில் 30 மடங்கு வரி. 1970-71-ல் மக்கள் மீது ரூ 1934 கோடி! இதே ஆண்டில் முதலாளிகள் மீது போட்ட நேரடி வரி ரூ. 338 கோடிதான்!

இவ்வளவு குறைவாக வரிவிதித்துவிட்டு—என்னமோ எக்கச்சக்கமாக முதலாளிகளிடமிருந்து வரியாகப் பிடுங்குவது போல் காங்கிரஸ் அமைச்சர்கள் பீத்திக்கொள்ளுவார்கள்.

அந்த அளவு வரிகூட போடக்கூடாது என்று விம்மிவிம்மி அழுகிறாரே மாதவன்! என்ன வேடிக்கை இது!

குறைவாகப் போட்ட வரியையாவது இந்தப்பெரு முதலாளிகள் கொடுத்தார்களா? சென்ற ஆண்டுவரை 841 கோடி ரூபாய் பாக்கி போட்டிருக்கிறார்கள்!...என்று ஆடிட்டர் ஜெனரல் அறிக்கை கூறுகிறது!

வரிபாக்கிதான் இவ்வளவு என்றால், வரிடிமிக்கிஎவ்வளவு தெரியுமா? 1970 ஜனவரி 9-ல் வெளிவந்த "எகனமிக் டைம்ஸ்" பத்திரிகையில்வந்த பி. டி.ஐ. செய்திப்படி, "2000 கோடி ரூபாய் வரை வரிடிமிக்கி விட்டிருப்பதாக அதிகாரபூர்வமல்லாத நிர்ணயிப்புகள் கூறுகின்றன" என்று குறிப்பிட்டிருக்கிறது. வரி டிமிக்கிபற்றி ஆராய்ந்த ஒரு குழுவே இந்த நிர்ணயிப்புக்கு வந்தாம்!

இவ்வளவையும் ஏப்பமிட்ட முதலாளித்துவத் திமிங்கிலங்களுக்கு எவ்வளவு சலுகைகள் தரப்பட்டுள்ளன தெரியுமா?

மின்சாரம் சும்மா! கட்டணம் வசூலித்தாலும் மிகவும் அற்பம் கோடி கோடியாய் வட்டியில்லாக்கடன்! குறைந்தவிலைக்கு மூலப்பொருள்கள்! வரிச்சலுகைகள்! மான்யங்கள்! போக்குவரத்து வசதிகள்!......ஆயிரமாயிரம் வழிகளில் உதவிகள்!

இவ்வளவையும் விழுங்கி ஏப்பமிட்ட மலை விழுங்கி மகாதேவன்களுக்கு—வக்காலத்து வாங்க வரிந்து கட்டுகிறாரே வழக்கறிஞர் மந்திரி!

இவர்களுக்கெல்லாம் கூச்சம் நாச்சம் ஏதும் இருக்காது போலிருக்கே!

—ஐ. மா. பா.

---

# பேங்குகள் நாட்டுடைமைத் திட்டமும் இந்திரா அரசின் மோசடியும்!

(முன் இதழ் தொடர்ச்சி)

இந்திரா அரசு இந்த வங்கிகளை நாட்டுடைமையாக்கிவிட்டு போட்ட கூச்சல் இருக்கிறதே! அடேயப்பா, எத்தனைகோஷங்கள்! எத்தனை வர்ணனைகள்!

இந்த நாட்டுடைமை, சோஷலிச அரசின் முதல் நடவடிக்கை!—சோஷலிசத்தின் முதற்படி! ஏகபோக முதலாளிகளை ஒடுக்குவதற்கு அடக்குவதற்கு எடுக்கப்பட்ட முதல் நடவடிக்கை!—இப்படி அது இது என்று எத்தனையோ—எல்லாம் இந்திரா அரசின் ஜகஜாலப் புரட்டுகள்.

இத்தனை ஆண்டுகளும்—நாட்டுடைமை யாருக்குப்பயன் பயன்பட்டது. ஏகபோக முதலாளிகளுக்குத்தானே! அவர்களுக்கு சேவகம் செய்பத்தானே! அப்படியிருக்கையில், இந்த வங்கிகள் நாட்டுடைமைத் திட்டம் மாத்திரம் மக்களுக்கா பயன்படப்போகிறது? இதுவும் வழக்கம்போல் அந்த முதலாளிகளின் பாத சேவைக்கே:

### பழைய பாதையே

என்னய்யா! புதிதாக இந்திரா அரசு சாதித்துவிட்டது; ஏனைய முதலாளித்துவ நாடுகள், பயன்படுத்தி, அலுத்து, உலுத்து புளுத்துப்போன கொள்கைதானே இது.

மேற்கு ஜெர்மனி, தன்னுடைய 18·1 சதமான தொழில்களை நாட்டுடைமையாக்கவில்லையா—இத்தாலி 28 சதமான தொழில்களை நாட்டுடைமையாக்கவில்லையா—பிரான்ஸ் 38·3 சதமான தொழில்களை நாட்டுடைமையாக்கவில்லையா—பிரிட்டன் 45 சதமான தொழில்களை நாட்டுடைமையாக்கவில்லையா—ஜப்பான் 29·8 சதமான தொழில்களை நாட்டுடைமையாக்கவில்லையா — இன்னும் எந்த நாடுதான் இதைச் செய்யவில்லை.

இதனால்தானே, அமெரிக்க தூதுவர், 'கீட்டிங்' 1969-ம் வருடம் செப்டம்பர் மாதம், சென்னையில் நடைபெற்ற நிருபர் கூட்டத்தில், வங்கிகளை நாட்டுடைமையாக்கியதால், அமெரிக்க மூலதனம் இந்தியாவுக்குள் நுழைவதை தடுக்காது" என்று கூறினார். அத்துடன் விட்டாரா—பிரான்சு அரசு இன்னும் ஏனைய முதலாளித்துவ அரசுகள் வங்கிகளை நாட்டுடைமையாக்கியதால், அமெரிக்க மூலதனம் அந்நாடுகளில் நுழைவதை தடுக்கவில்லை என்று போட்டாரே! ஒரு போடு.

ஏன்! அவ்வளவு தூரம் போகவேண்டும் தூதுவர் கீட்டிங் அவர்களின் சொந்த நாடு—தனிப்பட்ட முதலாளி சொர்க்க பூமி—அமெரிக்காவிலேயே 21·9 சதமான தொழில்கள் அரசுக்கு சொந்தமானவைதானே, ஐயா!

### ஏமாற்றுக் கருவி

வளர்ந்துவரும் ஜனநாயக இயக்கங்களின் குரல், வங்கிகளை நாட்டுடைமையாக்க வேண்டும் என்பதுதானே.

1969, இடைத்தேர்தலில் காணப்பட்ட காங்கிரஸ் எதிர்ப்புணர்ச்சியைக் கண்டவுடனே, காங்கிரஸ் தலைமைக்கு ஜன்னி கண்டுவிட்டது. இதை சமாளிக்க ஏதடா வழி என்று பார்த்தான். மக்களின் நீண்டகால கோரிக்கையான வங்கிகளை நாட்டுடைமையாக்கினான். ஆக்கிவிட்டு ஆ! ஊ! நாங்கள்தான் மக்களின் நீண்ட நாள் கோரிக்கையான வங்கிகளை நாட்டுடைமையாக்கும் பிரச்சனையை தீர்த்தோம்; ஆகவே நாங்கள்தான் முற்போக்கு என்று வேஷம் போடுகிறார்கள்.

ஆனல் மறுபக்கம் என்ன செய்கிறார்கள். அதுதான் முக்கியம். இந்த வங்கிகளை, ஏகபோக முதலாளிகளுக்கு இதுவரை செய்துவந்த உதவிகளை அதிகரிக்கவும், இன்னும் சிறப்பாகச் செய்யவும் ஒரு கருவியாகத்தானே பயன்படுத்துகிறார்கள்.

### வர்க்கப் பார்வை இல்லா வலது கம்யூனிஸ்டுகள்

தொழிலாளி வர்க்கப் பார்வையை நெடுநாட்களுக்கு முன்பே கைவிட்டுவிட்ட வலது கம்யூனிஸ்டுகள்தான், ஆளும் வர்க்கங்களின் 'மேனேஜிங் கமிட்டி' யான இந்திரா அரசு எடுத்த, அமுல் நடத்திய நடவடிக்கையான இந்த நாட்டுடைமைக் கொள்கையை தவறாகப் புரிந்துகொண்டுள்ளதில், ஆச்சரியம் இல்லை. இவர்கள் இந்திராவை முற்போக்குவாதி என்று சித்தரிப்பது யாருக்கு உதவுகிறது. தொழிலாளி வர்க்கங்களின் காங்கிரஸ் எதிர்ப்புணர்ச்சியை மட்டுப்படுத்தவும், அவர்களின் போராட்ட உணர்வை மழுங்க அடிக்கத்தானே உதவுகிறது.

### லெனின் அறிவுரை

அவர்களுக்கு லெனின் 60 ஆண்டுகளுக்கு முன்னே கூறியதெங்கே ஞாபகம் இருக்கப்போகிறது. அவர், "சமூக ஜனநாயக வாதிகள், ஆளும் வர்க்கத்தின் மக்கள் விரோத கொள்கைகளை அம்பலப்படுத்திக்கொண்டே' இருக்கவேண்டும்—மக்களுக்கு அவர்களின் புரட்சிக் கடமையை நினைவு படுத்தி வலியுறுத்திக் கொண்டே இருக்கவேண்டும்—சமூக ஜனநாயகவாதிகள் மக்களின் தீவிர அரசியல் விழிப்புணர்ச்சியும், ஒன்றுபட்ட இயக்கமும்தான்; எதேச்சதிகார அரசுகள் அவ்வப்போது வழங்கும் சில பல சலுகைகளை, ஆட்சியாளர்கள் அவைகளை ஏமாற்றுக் கருவிகளாகப் பயன்படுத்துவதைத் தடுத்து, புரட்சியின் வளர்ச்சிக்கு பயன்படும் கருவிகளாக மாற்றும் என்று மக்களுக்கு உணர்த்த வேண்டும்."

இது மட்டுமல்ல லெனின் சொன்ன எல்லாவற்றையுமே மறந்து பிதற்றுகின்றனர். அவர் "நாம் சுதந்திரமான தனி கொள்கையே பின்பற்ற வேண்டும்—அதையே மக்கள் முன்வைக்க வேண்டும்—தொழிலாளி வர்க்க புரட்சிப் போராட்டத்திற்கு துளியும் சந்தேகமில்லாமல் அக்கொள்கை ஆதரவாய் இருக்க வேண்டும்—அக்கொள்கை தொழிலாளி வர்க்கத்தின் சுதந்திரத்தையும், வர்க்க உணர்வையும், போர்க்குணத்தையும். வளர்ப்பதிலும். கூர்மைபடுத்துவதிலும் சந்தேகமில்லாமல் இருக்கவேண்டும். மேலே கூறப்பட்ட இந்த தந்திர உபாயங்களினாலேயே, இந்த எதேச்சாதிகார ஆட்சியாளர்களின் அரை மனதான, ஏமாற்றுத்தனமான, முதலாளித்துவ, போலீஸ் கொடுமையை மறைக்க உதவும் இந்த போலி நடவடிக்கைகளை வெளிப்படுத்த முடியும்."

அந்த நாட்டுடைமை திட்டத்தை வெறுமனே ஒரு ஏமாற்றுவித்தை என்று கூறிவிடுவதால் மட்டும் ஒருதொழிலாளி வர்க்க கட்சி, உழைக்கும் மக்களுக்கு சரியான விளக்கத்தை தரமுடியாது. அரசாங்க கொள்கைகளின் வர்க்க தன்மையையும் அவர்கட்கு விளக்க முடியாது. சமூகத்தை மாற்றியமைப்பதற்கான வர்க்க போராட்டத்திற்கு மக்களைத்திரட்டுவதும் இதனால் சாத்தியப்படாது.

(முற்றும்)

"பீப்பிள்ஸ் டெமாகரசியிலிருந்து"

தமிழாக்கம்: ஆர். ஆர். எம்.

---

# முதலமைச்சர் படத்திறப்புக்கு கட்டாய நிதி வசூல்!

## அரசு ஊழியர்களின் வேலை நேரம் பாழ்!

திருச்செந்தூர், அக். 23—

**இங்குள்ள மின் வாரிய வருவாய்த் துறை அலுவலகத்தில் அண்மையில் முதலமைச்சர் படத்திறப்பு விழா நடத்துவதற்காக, ஊழியர்களின் விருப்பத்துக்கு விரோதமாக கட்டாய வசூல் செய்யப்பட்டிருப்பதாகவும் ஊழியர்கள் 5 மணிநேரம் வேலைசெய்ய முடியாதபடி தடுக்கப்பட்டிருப்பதாகவும் அறிவிக்கப்படுகிறது. இதுபற்றி கூறப்படுவதாவது:—**

திருச்செந்தூர் மின் வாரிய வருவாய்த்துறை அலுவலகத்தில் பணிபுரிகின்ற ஆளும் கட்சியின் அரவணைப்பைக் கொண்ட கணக்காயர் சங்கம் என்ற அமைப்பு மேற்குறிப்பிட்ட தேதியில் அதிகார பூர்வமாக அலுவலக நேரத்திலேயே படத்திறப்புவிழா நிகழ்ச்சியை மந்திரி, எம். எல். ஏ, மாவட்டம் வட்டம் ஆகியோரின் துணையோடு கொண்டாடியது.

அரசின் கண்காணிப்போடு இயங்கக்கூடிய இந்த பொதுத்துறை நிறுவனம் முற்றிலும் அரசு அலுவலகங்களைப் போன்றே இயங்க வேண்டிய நிலையில் இருந்தும் ஒரு சிலரின் தன்னிச்சையான போக்கினால் நிகழ்ச்சி நடந்த தினத்தன்றும் அதற்கு முன் தினமும் அலுவலக நடைமுறை வேலைகள் எதுவும் செய்யாமலேயே முழுக்க முழுக்க படத்திறப்பு விழாவிற்கான நிகழ்ச்சிகளை மேற்கொண்டனர்.

### உயர் அதிகாரிகள் குவிந்தனர்

இந்தப் படத்திறப்பு விழாவிற்கான நிகழ்ச்சியில் நெல்லை மின் திட்ட மத்திய அலுவலக உயர் அதிகாரிகள் அனைவரும் கலந்து கொண்டனர். அதிகாரபூர்வமான இந்த நிகழ்ச்சியில் கலந்து கொள்வதற்கு அலுவலக வேலைகளை திடீர் சோதனைக்கு வந்தது போல் முகாமிட்டு ஒரே நாளில் அனைத்து உயர்மட்ட அதிகாரிகளும், வாரியத்தைச் சார்ந்த வாகனத்தில் (டிபார்ட்மெண்ட் வேன் நம்பர். 3620) இங்கு குழுமி திறப்பு விழா நிகழ்ச்சிகளை முழுமையாகமேற்கொண்டனர்.

இவர்களோடு மட்டுமின்றி ஆளும் கட்சியைச் சார்ந்துள்ள முன்னேற்ற சங்க பேரவையின் முக்கியஸ்தர்களும் அதே மின் வாரிய வாகனத்தில் திருநெல்வேலியிருந்து எவ்வித விடுப்பு மனுவும் (லீவ்லெட்டர்)இன்றி வந்து சேர்ந்தனர். நிகழ்ச்சி நாளன்று (6—10—1971) காலை முதல் இரவு வரை அலுவலகத்தில் அமைத்திருந்த பந்தலில் ஒலி பெருக்கி தொடர்ந்து பாடிக்கொண்டு அலுவலக வேலைகளுக்கு இடையூறாக இயங்கியது.

### அமைச்சர் வர மறுப்பு

இவ்வளவு ஏற்பாடுகள் செய்த பின்னரும் இந்த மாவட்டத்தில் சுற்றுப்பயணம் செய்து கொண்டிருந்த நலத்துறை அமைச்சர் திரு. அன்பழகன் இதில் குறித்த காலத்தில் கலந்து கொள்ளவில்லை. அவரை அழைக்க வேண்டிமின் வாரிய வாகனத்திலேயே கணக்காயர் சங்க முக்கியஸ்தர்களும், வட்டச் செயலாளரும், திருநெல்வேலி நகர்மன்ற தலைவர் திரு. சூரியநாராயணனும் இங்கிருந்து 6 மைல் தொலைவிலுள்ள காயல்பட்டிணம் என்ற இடத்தில்பொது கூட்டத்தில் பேச வந்திருந்த அமைச்சரை அழைக்கச் சென்றனர்.

### ஏமாற்றமும் நாடகமும்

அமைச்சர் திரு. அன்பழகனும் இந்நிகழ்ச்சி தனதுசுற்றுப் பயணத் திட்டத்தில் சேர்க்கப்படவில்லை என்ற காரணம் காட்டி திறப்பு விழாவிற்கு வர மறுத்து விட்டார். ஏமாற்றம் கண்ட தலைவர்கள் தாங்களே இருப்பவர்களைக் கொண்டு படத்திறப்பு விழாவை ஒருவாறு நடத்தி வைத்தனர். இந்நிகழ்ச்சியில் முதலமைச்சர் கருணாநிதி உருவப்படத்திறப்பு சேர்க்கப்படவில்லை. ஆனால் இறுதி நேரத்தில் மாபெரும் தவறு செய்ததுபோல் எண்ணி முன்னேற்ற சங்க பேரவையினர் திரு கருணாநிதி படத்தையும் திறக்க வேண்டிய கட்டாயத்தோடு நிகழ்ச்சியில் மாறுதல்செய்து அவரதுபடத்தையும் திறந்து வைத்தனர்.

இவ்வலுவலகத்தில் உள்ள குறைந்த பட்சம் 50 ஊழியர்களுக்கு, ஒருவருக்கு 5 மணி நேரம் என்ற கணக்கில் அன்று 250 மணி நேரங்கள் எவ்விதப் பயனும் இன்றி வீணாக்கப்பட்டன. உள்ள உழைப்பே காணாதபடி தாழ்ந்த நிலை கொண்ட நமக்கு இப்படி நேரத்தை வீணடித்தால் அதனால் எவ்வளவு பொருள் நஷ்டம், வளர்ச்சிக்கு எவ்வளவு தடங்கல்கள்.

### கெடுபிடி வசூல்

உயர்மட்ட அதிகாரிகள் அறுவருக்கும் மேற்பட்டவர்கள் இந்நிகழ்ச்சியில் பங்குகொள்வதோடு திடீர் சோதனை என்ற பெயரில் தவறான முறையில் முகாம் போட்டு, அதற்காக வாரியத்தின் வாகனங்களையும் உபயோகித்து, பொய்யான முறையில் பயணப்படி பெறுவதற்கான வாய்ப்புகளை ஏற்படுத்தி கொண்டுள்ளனர்.

விழாவிற்கான செலவுகளை சமாளிக்க ஊழியர்களிடம் ஒரு கணிசமான தொகை வசூல் செய்ததோடு. மின் வாடிக்கையாளர்களிடமும் புதிதாக விவசாய மின் இணைப்பு வேண்டுவோரிடம் தலைக்கு ஒரு தொகை நிர்ணயித்து வசூல் செய்துள்ளனர். இவ்வழைப்பிதழில் முதலமைச்சர் கருணாநிதியின் உருவப்படத் திறப்பு விழா சேர்க்கப்படவில்லை. தி. மு. கழக மாவட்ட, வட்டச் செயலர்கள் வலியுறுத்தியதின் பேரில் இறுதியாக முன்னேற்ற சங்கப் பேரவையினர் அவரது படத்தையும் அன்றைய தினத்தில் திறந்துவைக்க ஏற்பாடு செய்தனர்.

"ஏழையின் சிரிப்பில் இறைவனைக் காணு"கின்ற அரசும், அதன் சார்புடைய தொழிற் சங்கமும், பொதுத் துறை நிறுவனங்களை கட்சி விளம்பரத்திற்காகப் பயன்படுத்தினர்.

இந் நிகழ்ச்சியில் பங்கு கொள்ள விரும்பாத இதர ஊழியர்கள் அனுமதியுடன் வெளியேறிச் சென்றனர்.

---

# துப்பாக்கி சூட்டில் இறந்தவர்கள் நினைவு நாள்

## மூணாறில் கொண்டாடப்படுகிறது

மூணாறு, அக். 24—

துப்பாக்கி சூட்டில் இறந்த பாப்பம்மாள்—அசன் ராவுத்தர் நினைவு நாள் கொண்டாட முடிவு செய்யப்பட்டது.

1958 அக்டோபர் 20-ம் தேதி அன்று சம்பள உயர்வு கேட்டு தேவிகுளம் வட்ட தேயிலைத்தோட்ட தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் செய்தார்கள்.

இந்த வேலை நிறுத்தத்தின் போது கூடாரவலை தேயிலைத் தோட்டத்தில் வேலை நிறுத்தம் செய்த தொழிலாளர்களுக்கும் போலீசாருக்கும் மோதல் ஏற்பட்டது.

இந்த மோதலின்போது போலீசார் துப்பாக்கிப் பிரயோகம் நடத்தினர்கள். இதில் பாப்பம்மாள்—அசன்ராவுத்தர் இருவரும் இறந்தனர்.

இதன் நினைவாக கடந்த 20-ம் தேதி கூடாரவலையில் நினைவு நாளும் பொதுக்கூட்டமும் நடைபெற்றது.

மூணாறு நகரில் இன்று நினைவு நாளும் மாபெரும் பொதுக் கூட்டமும் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் சார்பில் நடைபெறுகிறது.

---

பி அண்டு சி மில்லில்

# வேலை நிறுத்த நோட்டீஸ்!

சென்னை, அக். 22—

சென்னையிலிருக்கும் பக்கிங்ஹாம் கர்நாட்டிக் மில்லில் வேலைநிறுத்த நோட்டீசு கொடுக்கப்பட்டிருக்கிறது.

சென்னை தொழிலாளர் சங்கத்தின் பொதுச் செயலாளர் எஸ். பக்கிரிசாமி, ஒரு அறிக்கையில், "தொழிலாளரின் நியாயமான கோரிக்கைகளை நிர்வாகம் ஏற்காவிட்டால் நவம்பர் 6-ம் தேதியிலிருந்து. வேலைநிறுத்தம் நடைபெறும்" என்று கூறியிருக்கிறார்.

நிர்வாகம், தொடர்ந்து மில் வேலை நடப்பதற்காக, விடுமுறைகூட விடாமல். வேலை வாங்குவது என்று தீர்மானித்திருக்கிறது. இதைஎதிர்த்தும், இரண்டாவது ஊதியக்குழுவின் சிபாரிசை அமுல் நடத்தக் கோரியும், கிராச்சுட்டி திட்டத்தில் மாறுதல் கோரியும், ஊதிய உயர்வு, 1970-ம் ஆண்டுக்கான கூடுதல் போனஸ், 1969-ம் ஆண்டு ஜனவரி மாதம் வெளியேற்றப்பட்ட ஊழியர்களை திரும்ப எடுப்பது போன்ற கோரிக்கைகளுக்காக இந்தத் தொழிலாளர்கள் போராடி வருகிறார்கள்.

---

# 'இந்திரா கம்யூ. கட்சி'

## வலது கம்யூனிஸ்டுளுக்கு ஏ. கே. ஜி. வைத்த புதுப் பெயர்!

கொச்சி, அக். 23

'இந்திரா கம்யூனிஸ்ட் கட்சி' என்றபுதியபெயரைவலதுசாரி கம்யூனிஸ்டுகட்சிக்கு ஏ. கே. கோபாலன் சூட்டினர்.

இன்று நிருபர்களுக்கு அளித்த பேட்டியில், மேலும் கூறியதாவது, இந்தியாவில் ஒரே கம்யூனிஸ்ட்கட்சிதான் இருக்கிறது. அது இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) தான் என்று கூறினர்.

---

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) தமிழ் மாநிலக் குழு சார்பில் தீக்கதிர் அச்சகத்தில் (13 முதல் சந்து, வடக்குச் சித்திரை வீதி, மதுரை—1.) அச்சிட்டு, வெளியிடுபவர் ஆசிரியர்: கே முத்தையா.